

# அம்புலிமாமா

## மே 1997



## பொருளடக்கம்





**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

உங்கள் பிரதிகளுக்கு முந்துங்கள்!

# மங்கை

மே '97

திருமதி துர்க்கா சுந்தரம், திருமதி லக்ஷ்மி, திருமதி கீதா தெய்வசிகாமணி, திருமதி கமலா சந்திரன், யாழ்ப்பாணம் செல்வி நா. ஆரணி, திருமதி சத்யா சிகாமணி ஆகிய வாசகிகள் எழுதும்

## 'எங்கள் வாழ்வில் சத்ய சாயி பாபா'



திருமதி சாந்தி ராமமூர்த்தி எழுதும்

## 'ஸ்ரீ சாயி பாபாவின் அற்புதங்கள்'

–பாபாவின் பரவசமூட்டும் வண்ணப்படங்களுடன் மெய் சிலிர்க்க வைக்கும் பக்தித் தொடர்!



மற்றும் - **ரமணி** எழுதும் 'திருச்சீரலை வாய் முருகன்' - சிறப்புக் கட்டுரை

**லட்சுமி ராஜரத்னம்** - புதிய தொடர் கதை

அழகுக்கு ஆலோசனை, இயற்கை அழகு சிகிச்சை, சுவைமிகு சூப் வகைகள், பத்திரிகைத் துறையில் பெண்கள் - புதிய தொடர், சாதனை மகளிரின் பெற்றோர்கள் பேசுகிறார்கள் - புதிய தொடர்

விலை ரூ. 9/-

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகிரெட்டி





## நீங்களே தொழிலதிபர் ஆகுங்கள்

பரீட்சைகள் பறந்தோடி விட்டன. கோடை விடுமுறையும் வந்துவிட்டது. வருடப் படிப்பு முடிந்து அடுத்த ஆண்டுப் படிப்பிற்குத் தயாராக வேண்டும். பள்ளியில் பனிரெண்டாம் வகுப்பை முடித்து தேர்வு எழுதியவர்கள் கல்லூரிகளில் இடம் கிடைக்க வேண்டுமே என்று கவலைப்படுகிறார்கள். கல்லூரிகள் பல இருந்தும் இடம் கிடைப்பது எளிதல்லவே!

எல்லோருக்குமா மருத்துவக் கல்லூரியிலோ அல்லது பொறி இயல் கல்லூரியிலோ இடம் கிடைக்கிறது? மதிப் பெண்கள் பெறுவதைப் பொறுத்தும் மற்றும் பல விஷயங் களின் பேரிலும்தானே இக்கல்வித் தலங்களில் இடம் அளிக் கப்படுகிறது! இதற்காக மாணவர்கள் தக்க பயிற்சி பெற்று நுழைவுத் தேர்வுகளை எழுத முயல்கிறார்கள். எல்லோரு டைய நோக்கமும் இத்தகைய கல்லூரிகளில் பயின்று ஒரு நல்ல வேலையை அடைவதே.

எல்லோரும் சுயமாக வேலை செய்யலாம் என்பதை இத் தருணத்தில் மறந்து விடுகிறார்கள். இளைஞர்கள் தாமே ஒரு தொழிலைத் தொடங்கி ஏன் தொழிலதிபர்களாக ஆகக் கூடாது? பிறரிடம் கை கட்டி நின்று ஏன் வேலை செய்ய வேண்டும்? அரசாங்கமும் இளைஞர்கள் தாமே தொழில் தொடங்க உதவுகிறதே. இதைப் பயன் படுத்தி பிறரிடம்தான் வேலை செய்ய வேண்டும் என்ற எண்ணத்தை விட்டு விட்டுத் தாமே தொழிலை ஆரம்பித்து முன்னுக்கு வாருங்கள்.


மதிமுகம்: 100 மே 1997 புன்னகை: 5

தனிப்பிரதி: ரூ.6.00 வருட சந்தா: ரூ.72.00




PolioPlus



# IMMUNIZATION AN ASSURANCE OF GOOD HEALTH TO CHILDREN

## VACCINATIONS When and How Many

| Age to Start Vaccination | Name of Vaccine | Name of Disease | How Many Times |
|---|---|---|---|
| Birth | **BCG** | **Tuberculosis** | Once |
| 6 weeks | **Polio** | **Polio** | Three times with intervals of at least one month |
| 6 weeks | **DPT** | **Diphtheria Pertussis (Whooping Cough) Tetanus** | Three times with intervals of at least one month |
| 9 months | **Measles** | **Measles** | Once |

**Babies should receive all vaccinations by the time they are twelve months old.**

Pregnant women should get themselves vaccinated against Tetanus (TT) twice—in an interval of at least one month—during the later stages of pregnancy.

HEALTHY CHILD—NATION'S HOPE & PRIDE

Design courtesy : World Health Organisation

செய்திகளும் தகவல்களும்

# பழைய நண்பர்கள் புதிய கூட்டுறவு

ஒரு நாடு மற்றொரு நாட்டுடன் நல்லுறவு கொண்டும் தொடர்புகளை வளர்த்துக் கொண்டும் ஒத்துழைக்கும் போது அது மக்களின் முன்னேற்றத்திற்கு எந்த விதத்திலும் உதவுகிறது. பல நாடுகள் தம்மிடையே கூட்டுறவு கொண்டு பல நிறுவனங்களை நிறுவி வியாபார முன்னேற்றத்திற்கு வழி காண்கின்றன. இவ்விதமாய் அண்மையில் இந்து மகா சமுத்திரக் கூட்டுறவுக்கழகமான இண்டியன் ஓஷன் ரிம் அசோஸியேஷன் என்பது இந்துமாக்கடல் கரையை ஒட்டியுள்ள தென்ஆப்பிரிக்கா, மடகாஸ்கர், மொரீஷஸ், மொஜாம்பிக், டான்ஜானியா, கென்யா, ஓமன், ஏமன், இந்தியா, ஸ்ரீலங்கா மலேசியா, சிங்கப்பூர், இந்தோனேசியா, ஆஸ்திரேலியா என்ற நாடுகளை உறுப்பினர்களைக் கொண்ட ஒரு அமைப்பாக ஆகியது.

நான்கு ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டிற்கு வந்த தென் ஆப்பிரிக்காவின் அயல் விவகாரத்துறை அமைச்சர் பிக் போடா முதன் முதலில் இந்துமாக் கடல் நாடுகளின் கூட்டுறவு பற்றிப் பேச்சைத் துவக்கினார். 1995ல் மொரீஷஸ் செய்த முயற்சியால் ஆஸ்திரேலியா, இந்தியா, கென்யா, மொரீஷஸ், ஓமன், சிங்கப்பூர், தென் ஆப்பிரிக்கா ஆகிய ஏழு நாடுகள் சேர்ந்து ஒரு கூட்டுறவு அமைப்பை நிறுவின. அதன் பின் மற்ற ஏழு நாடுகள் அதில் சேர்ந்தன.

மொரீஷஸின் தலை நகரான போர்ட் லூயியில் இப் பதிநான்கு நாடுகளின் அயல் நாட்டு விவகாரத் துறை, வணிகத் துறை ஆகியவற்றைச் சேர்ந்த அமைச்சர்கள் ஒன்று கூடி இந்த அமைப்பின் பிரகடனத்தை உருவாக்கினார்கள். உறுப்பு நாடுகளிடயே கூட்டுறவு, நட்பு போன்றவற்றைக் குறிக்கோளாகக் கொண்டு இந்த பிரகடனம் வெளியிடப்பட்டது. இதற்கான வாய்ப்புக்களைப் பயன்படுத்திக் கொள்ள பொருளாதார அடிப்படையில் கூட்டுறவு அவசியம் என இப்பிரகடனம் வலியுறுத்துகிறது.

வணிக வசதிகள் செய்து, அதி நவீன விஞ்ஞானத் தொழில் நுணுக்கங்களைத் தமக்குள் பகிர்ந்து கொண்டு மனிதப் பண்பாடுகளை வளர்த்தும் சுற்றுலா வசதிகள் செய்வதும் போன்ற பத்து திட்டங்கள் வாயிலாக தன் குறிக்கோளை அடைய இந்த அமைப்பு தீர்மானித்தது. இதன் தலைமை அலுவலகம் மொரீஷஸில் ஏற்படுத்தப் பட்டுள்ளது.

இந்த அமைப்பில் வேறு சில நாடுகளும் சேர விரும்புகின்றன. ஆனால் இந்த அமைப்பு கட்டுக் கோப்புடன் வலுவுள்ள தாய்ச் செயல்பட உறுப்பினர் நாடுகளின் எண்ணிக்கை குறைவாக இருந்தாலே நல்லது எனவும் இதில் நிதானத்துடன் நடக்க வேண்டுமென்றும் போர்ட் லூயியில் நடந்த கூட்டத்தில் இந்தியா கூறியது. இக்கூட்டத்தில் கலந்து கொண்ட அயல்நாட்டு விவகாரத்துறை அமைச்சர் திரு. ஐ.கே. குஜ்ரால் பழங்காலத்தில் இந் நாடுகளிடையே கடல் வழிகளின் வாயிலாக தொடர்புகள் இருந்ததைக் கூறி காலனி ஆதிக்க நாடுகளின் அதிகாரத்தால் அவை விடுபட்டுச் சிதறிப் போயின எனவும் தற்போது பழைய நண்பர்கள் மீண்டும் சேர்ந்து கூட்டுறவு கொண்டுள்ளார்கள் எனவும் குறிப்பிட்டார்.





# தூண்டு கோல்

சொர்ணகிரி என்ற நாட்டை சொர்ணகுப்தன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் இலக்கியத்தில் மிகுந்த ஆர்வம் கொண்டவன். ஒரு கவிஞனும் கூட. அதனால் அவனுடைய அவையில் கவிஞர்களுக்கும் பண்டிதர்களுக்கும் நல்ல ஆதரவும் கௌரவமும் கிடைத்து வந்தது.

அந்த நாட்டின் ஆஸ்தான பண்டிதர் ஆனந்த சர்மா. அவர் பல சிறந்த காவியங்களை எழுதி மன்னனின் அன்பிற்கும் மதிப்பிற்கும் பாத்திரமானவர். ஒருநாள் மன்னர் பண்டிதர்களும் கவிஞர்களும் நிறைந்திருந்த சபையில் ஆனந்த சர்மாவைப் பார்த்து "கவிகுல சிரோன்மணியே. கடந்த சில மாதங்களாக தங்களது புதிய இலக்கியப் படைப்பு எதுவும் வரவில்லையே. உங்களது புதிய இலக்கியம் படைப்பு ஒன்றைக் கேளாது இருந்தால் எனக்கு உலகில் எதுவுமே இல்லை என்று வெறுப்பே ஏற்படுகிறது. எனவே அடுத்து வரும் புத்தாண்டு நாளன்று தங்களது புதிய காவி யம் ஒன்றைக் காது குளிரக் கேட்க விரும்புகிறேன். என் இந்த விருப்பத்தை நிறைவேற்ற வேண்டும்" எனப் பணிவுடன் வேண்டினான்.

ஆனந்த சர்மாவும் பெருமூச்சு விட்டவாறே "மன்னா! குயில் வசந்த காலத்தில்தான் பாடும். கார் மேகங்களைக் கண்டுதான் மயில் தோகை விரித்து ஆடும். தாமரை சூரியனைக் கண்டாலே மலரும். எனவே கவிஞனின் கவிதை அவனது மனநிலைக்கு ஏற்ப சூழ்நிலை இருந்தாலே வெளிவரும்" என்றார்.

இதைக் கேட்டு பாலபாரதி என்ற இளம் கவிஞன் தன் இருக்கையிலிருந்து எழுந்து நின்று "அரசே! ஆனந்த சர்மா அவர்கள் கூறியதில் கவிஞனுக்கு மனம் இருந்தால் கவிதை வரும் என்பதை ஏற்கலாம். மற்றபடி மனோ நிலை, சூழ்நிலை என்பதெல்

—சிவனார் செல்வன்—

லாம் சரியல்ல. இதெல்லாம் ஒருவன் எண்ணித் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்வது. கவிஞன் கவிதை புனைவதில் முனைந்து விட்டால் எந்த சூழ்நிலையைப் பற்றியும் கவலைப் படமாட்டான்.'' என்று அடித்துக் கூறினான்.

இதைக் கேட்டு ஆனந்தசர்மாவின் மீது பொறாமைப் பட்டுக் கொண்டிருந்த சில கவிஞர்கள் கைதட்டிச் சிரித்தார்கள். பாலபாரதியின் சுடு சொற்கள் ஆனந்த சர்மாவை மிகவும் வாட்டின. அவரது முகம் கோபத்தால் சிவந்தது. அவர் பாலபாரதியை நோக்கி ''பாலா! நீ இளம் வயதினன். கன்னா பின்னாவென்று காதல் கவிதைகளை எழுதி இளம் வயதினரின் கைதட்டல்களைப் பெறும் உனக்கு உயர்ந்த கவிதை எப்படி இருக்கும் எனத் தெரியாதுதான். கவிதை வெறும் மூளை இருந்தால் வந்து விடாது, மனதின் அடித்தளத்திலிருந்து வெளிவர வேண்டும்'' என்றார் கடுகடுப்புடன்.

பாலபாரதி சிரித்தவாறே ''அப்படியானால் மூளை இல்லாமலேயே கவிதை புனைந்து விட முடியும் என்கிறீர்களா?'' என்று குத்தலாகக் கேட்க சில கவிஞர்கள் கேலியாகச் சிரித்தார்கள். பாலபாரதியின் சொற்களை விட சில கவிஞர்கள் சிரித்துக் கை தட்டி கேலி செய்தது ஆனந்த சர்மாவிற்கு ஆத்திரம் மூட்டியது. அவர் பாலபாரதியைப் பார்த்து ''உன்னால் புத்தாண்டின் ஆரம்ப நாளுக்குள் ஒரு காவியம் எழுதி விட முடியுமா?'' என்று எரிச்சலுடன் கேட்டார். பாலபாரதியும் ''ஓ! முடியுமே'' எனவே ஆனந்தசர்மாவும் ''அப்படியானால் நீயே ஒரு காவியத்தை எழுதிக் கொண்டு வருவதாகக் கூறலாமே'' என்றார் முகத்தைச் சுளித்தவாறே.



அதுவரை அந்த வாக்கு வாதத்தைக் கவனித்துக் கொண்டிருந்த மன்னன் ''கவிஞர்களே! நீங்கள் இருவருமே காவியங்களை எழுதிக் கொண்டு வாருங்கள். அவற்றில் சிறந்தது எது எனக் கண்டு அதை எழுதியவருக்குக் கனகாபிஷேகம் செய்கிறேன்'' என்றான். இரு கவிஞர்களும் அவ்விதமே செய்வதாக கூறினார்கள்.

தம் வீட்டை அடைந்த ஆனந்த சர்மா ஆழ்ந்த யோசனையில் மூழ்கி விட்டார். அவர் சாப்பிடும் போது சரியாகச் சாப்பிடாமல் எதோ யோசனையில் இருக்கவே அவர் மனைவி தர்மாம்பாளும் ''நீங்கள் அரண்மனையிலிருந்து வந்தது முதல் ஏதோ யோச



னையில் இருக்கிறீர்களே. தர்பாரில் எதாவது நடந்ததா? மன்னர் ஏதாவது சொன்னாரா?'' என்று பரிவுடன் கேட்டாள்.

அப்போது வெளியே இருந்து சர்மாவின் புதல்வி மாலதி தன் தாயார் கூறியதைக் கேட்டவாறே வந்து ''அம்மா! அப்பாவை ஒருகடுஞ்சொல் கூற மன்னருக்குத் துணிவு ஏது? அச்சபையில் அப்பா சொல்வது தான் காவியம். அதற்கு எதிர்ப்பே இராது'' என்றாள். சர்மாவும் ''நீ சொன்னது போல இன்றுவரை அப்படித்தான் இருந்தது. ஆனால் இன்று ஒரு பொடிப் பயல் பாலபாரதி என் பவன் என்னோடு போட்டி போட்டு விட்டான்'' என்று கூறி அரச அவையில் நடந்ததையெல்லாம் விவரித்தார்.

பாலபாரதியின் பெயரைக் கேட்டதுமே மாலதியின் முகம் மலர்ந்தது. அவள் தன் தந்தையுடன் அரச சபைக்குச்சென்றபோதெல்லாம் அவனைப் பார்த்திருந்தாள். அவனது கவிதைகளை அவையில் கூறும் போதும் கேட்டிருந்தாள். அவன் அழகானவனே. நற்குணங்களும் நல் நடத்தையும் கொண்டவனென அவள் அறிந்து இருந்தாள். அப்படிப்பட்டவனா தன் தந்தையை எதிர்த்துப் பேசிப் போட்டியும் போடுகிறான் எனக் கேட்டதும் அவளுக்கு கோபம் வந்தது. தந்தையிடம் அவள் ''அவன் முன் பின் யோசியாமல் உங்களுடன் மோதி விட்டான். அவமானப் படத்தான் போகிறான்'' என்று ஆறுதல் கூறினாள்.

ஆனந்த சர்மா அன்றிரவே எழுத்தாணி எடுத்து ஓலைகளில் 'வாழ்க்கைச் சக்கரம்' என்ற காவியத்தை எழுதலானார். மானிட வாழ்வின் பல நிலைகளை இயற்கையோடு ஒப்பிட்டு மிக அற்புதமான காவியத்தை அவர் படைத்தார். அவர் இரவும் பகலும் சிரமப்பட்டு அதனைப் புத்தாண்டு தினத்திற்கு முன்பு முடிக்கவும் முடித்தார்.

புத்தாண்டு நாளன்று அவர் தன் காவியத்தை எடுத்துக் கொண்டு தன் மனைவியையும் மகளையும் அழைத்துக் கொண்டு அரச சபைக்குச் சென்றார். அப்போது பாலபாரதியும் மற்றும் பலகவிஞர்களும் நகரப் பிரமுகர்களும் அங்கு கூடி இருந்தனர். பாலபாரதி மாலதியைப் பார்த்துப் புன்னகை புரிந்தான். மாலதியும் பதிலுக்குக் குறுநகை புரிந்து அவனது நலன் விசாரிப்பது போல நடந்து கொண்டாள்.

இச்சமயத்தில் மன்னன் அரச அவைக்குள் வரவே எல்லோரும் மரியாதையுடன் எழுந்து நின்றார்கள். மன்னன் தன் அரியாசனத்தில் அமரவே எல்லோரும் தம் ஆசனங்களில் அமர்ந்தனர். அவன் ஒருமுறை சபையிலிருந்தவர்களை எல்லாம் பார்த்துவிட்டு ''இன்று புத்தாண்டுநாள், இன்று ஆனந்த சர்மாவும் பாலபாரதியும் தம் படைப்புகளை படித்துக் காட்டி நம்மை மகிழ்விக்கப் போகிறார்கள்'' என்றான்.

முதலில் ஆனந்தசர்மா எழுந்து தம் தொண்டையைக் கனைத்து விட்டு தமது புதிய படைப்பான வாழ்க்கை சக்கரத்தைத்தமது வெண்கலக்குரலில் கம்பீரமாகப் படிக்கலானார். அவர் ஒவ்வொரு செய்யுளாகப் படிக்கப் படிக்க, மன்னனும் மற்றவர்களும் அதனை ரசித்துப் பாராட்டினார்கள்.

ஆனந்தசர்மா எல்லாவற்றையும் படித்து முடித்ததும் சபையோர் வெகு நேரம்வரை தம் பாராட்டுதல்களை கரவொலி எழுப்பித் தெரித்தார்கள்.

இதற்குப் பிறகு பாலபாரதியின் முறை வந்தது. அவன் தன் பையிலிருந்த ஓலைச் சுவடியை எடுத்து மன்னனருகே சென்று அதை அவனிடம் கொடுத்தான். மன்னனும் அந்தச் சுவடியைப் பிரித்துப் பார்த்தான் அதில் எந்த ஒரு ஓலையிலும் எதுவுமே எழுதப்பட்டிருக்கவில்லை. அதை மன்னன் ஒருமுறைக்கு மூன்று முறையாக நன்கு பார்த்துவிட்டு ''இதுதான் நீங்கள் எழுதிய காவியமா?'' என்று கேட்டான்.

பாலபாரதி பதில் எதுவும் கூறாமல் புன்னகை புரிந்தவாறே நின்றான்.



அதைக் கண்ட மன்னன் யோசிக்கலானான். இரண்டொரு நிமிடங்களில் அவனுக்கு விஷயம் புரிந்து விட்டது. அவன் உடனே ''ஆக ஆனந்த சர்மாவை ஒரு அரிய காவியத்தைப் படைக்க வைத்த பெருமை உங்களைத்தான் சாரும் என்கிறீர்களா?'' எனக் கேட்டான்.

அருகே அமர்ந்திருந்த அமைச்சர் ஞானமணி எழுந்து ''அரசே! தாங்கள் கூறுவது புரியவில்லையே. பாலபாரதி ஆனந்த சர்மாவை அரிய காவியம் படைக்க வைத்தாரா? அப்படியானால் பால பாரதி எழுதித் தங்களிடம் கொடுத்துள்ள ஓலைச் சுவடி இந்த சபையில் படித்துக் காட்டக் கூடத் தகுதியை பெறவில்லையா?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

மன்னனும் சிரித்தவாறே ''கவிஞர் பாலபாரதிக்குத் தன் திறமையும் புலமையும் எவ்வளவு என்று நன்கு தெரியும். அவர் ஆனந்த சர்மாவுடன் போட்டி போட்டு நின்றாரென்றால் அதற்கு ஏதோ தகுந்த காரணம் ஒன்று இருக்கத்தானே வேண்டும்? அது என்னவாக இருக்கும்? ஆனந்த சர்மாவினுள் உறங்கிக் கிடக்கும் கவிதா சக்தியைத் தட்டி எழுப்ப வேண்டும் என்பதுதான் அது. ஆஸ்தான கவிஞரைப் போட்டி போட வைத்தால் இது நடக்கும் எனத் தெரிந்தே பாலபாரதி ஆஸ்தான பண்டிதருடன் வாக்குவாதம் புரிந்து அவுரைப் போட்டிக்கு வரச்செய்தார். அதனால் நமக்கு அரிய காவியம் கிடைத்தது. பாலபாரதி போட்டி போட்டுக் கொண்டு என்ன எழுதிக் கொண்டு வந்து கொடுத்தார் என்று கேட்கிறீர்களா? அதில் எதுவுமே எழுதப்பட்டிருக்கவில்லை'' என்று கூறி வெறும் பனை ஓலைகளைக் காட்டினான்.

அதைக் கேட்ட ஆனந்த சர்மா எழுந்து போய் பால பாரதியைக் கட்டித் தழுவிக் கொண்டு ''நான் உன்னைத்தவறாகப் புரிந்து கொண்டதற்காக மிகவும் வருந்துகிறேன்'' என்றார். பாலபாரதியும் ''உங்களிடமிருந்து அரிய காவியத்தைப் பெற வேண்டுமென்பதற்காக அன்று தங்களுடன் விதண்டாவிவாதம் செய்தேன். அதற்காக என்னை மன்னியுங்கள்'' என்று வேண்டினான்.

ஆனந்த சர்மாவுக்கு மன்னன் கனகாபிஷேகம் செய்தான். மன்னன் பாலபாரதியையும் மாலதியையும் அவ்வப்போது பார்த்து அவர்கள் கண்களாலும் புன்முறுவல்களாலும் பேசிக் கொள்வதைக் கொண்டு அவர்களது நிலையைப் புரிந்து கொண்டான். அவன் சர்மாவிடம் ''இந்த நல் முகூர்த்தத்தில் இன்னொரு நற்செயலையும் செய்து விடலாமா என்று பார்க்கிறேன் இந்த பாலபாரதியைத் தங்கள் மாப்பிள்ளையாக ஆக்குவதுதான் அந்த நற்செயல். தங்கள் மகளும் அக்கவிஞரை விரும்புகிறாளென்று தெரிகிறது'' என்றான். சர்மா தன் மகளிடம் கேட்டு அவள் விருப்பத்தை அறிந்து கொண்டார்.

அதே முகூர்த்தத்தில் பால பாரதிக்கும் மாலதிக்கும் விவாகம் விமரிசையாக நடந்தேறியது.





# எவ்வாறு அறிந்தான்?

ஒருநாள் சுல்தான் தன் நண்பனான உசேனுடன் உலாவ தலை நகரை விட்டு சற்று தூரம் சென்றான். உசேன் சிறந்த அறிவாளி. எதையும் கூர்ந்து கவனிப்பவன் அவன் எதைச் சொன்னாலும் அது சரியாக இருக்கும். அப்போது சற்று தூரத்தில் யாரோ ஒருவன் தமக்கு முன்னால் சென்று கொண்டிருப்பதைப் பார்த்த சுல்தான் உசேனிடம் ''உசேன். நீதான் அறிவாளியாயிற்றே. அதோ போகிறானே. அவன் என்ன தொழில் செய்பவன் என்று சொல் பார்க்கலாம்'' என்று கேட்டான். உசேனும் அந்த மனிதனை ஓரிரு நிமிடங்கள் பார்த்து விட்டு அவன் ஒரு தச்சன்'' எனக் கூறினான்.

அப்போது சுல்தான் ''சரி, அவனது பெயர் என்ன?'' என்று கேட்க உசேனும் ''அவனுக்கும் என் பெயர்தான்'' என்றான். சுல்தானும் ''ஓ! அந்த மனிதனை நீ முன்பே அறிவாயா?'' என்று கேட்க உசேனும் ''இல்லை எனக்கு அவனைத் தெரியாது'' என்றான். அப்போது சுல்தான் ''அப்படியானால் உனக்கு அவனது பெயரும் தொழிலும் எப்படித் தெரிந்தது?'' என்று கேட்க உசேனும் ''நீங்கள் என்னை உசேன் என்று பெயர் சொல்லிக் கூப்பிட்ட போது அவனும் திரும்பிப் பார்த்தான். அதனால் அவனது பெயர் உசேன் என்று நான் தெரிந்து கொண்டேன். அவன் போகும் வழியில் ஓங்கி உயர்ந்து பருமனான மரங்களையே பார்த்துக் கொண்டே சென்று கொண்டிருந்தான். சிறு செடிகளைப் பார்க்கவில்லை. எந்த மரத்திலிருந்து நல்ல பலகைகளாக அறுக்கலாம் என எண்ணிப் பார்ப்பவன் யாராக இருக்க முடியும்? தச்சன்தான். அதனால் தான் அவன் ஒரு தச்சன் என்று தெரிந்து கொண்டேன்'' என்றான்.

சுல்தானும் ''பேஷ். நீ எதையும் நன்கு கவனிக்கிறாய். சரி அவன் சற்று முன் என்ன சாப்பிட்டான் என்று கூற

—சங்கர. வெங்கடாசலம்—

முடியுமா?'' என்று உசேனும் சற்று நேரம் வரை அவனைப் பார்த்து விட்டு'' அவன் இனிப்புப் பண்டம் எதையாவது சாப்பிட்டிருக்க வேண் டும் அது அநேகமாகத் தேனாகத்தான் இருக்க வேண்டும்.'' என்றான். சுல்தா னும் ''நீ கூறிய தெல்லாம் சரியா என்று அவனை அணுகிக் கேட்கலாம்'' என் றான். இருவரும் வேகமாகச் சென்று அப்பயணியை அணுகினர்.

சுல்தான் அவன் பெயரையும் அவன் செய்யும் தொழிலையும் கேட் கவே அவனும் ''என் பெயர் உசேன். நான் ஒரு தச்சன்'' என்றான். சுல்தா னும் ''சரி. சற்று முன் நீ என்ன சாப் பிட்டாய்?'' என்று கேட்க அவனும் ''அரைமணிக்கு முன் நான் சுத்தமான தேனைக் குடித்தேன்'' என்றான்.

சுல்தானும் ''பேஷ். உன்னைப் பாராட்டிப் பரிசளிக்கிறேன்'' எனக் கூறித் தான் அணிந்திருந்த தங்கக் காப் பைக் கழற்றி அவனுக்குக் கொடுத் தான் அப்பயணியும் அதை மகிழ்ச்சி யுடன் பெற்றுக் கொண்டு சுல்தானை வணங்கி விட்டுச் சென்றான்.

அவன் போனதும் சுல்தான் உசே னிடம் ''நீ எப்படி அவன் இனிப்புப் பண்டம் தான் சாப்பிட்டான் என்று கூறினாய்? அதுவும் தேனைத்தான் அவன் குடித்திருப்பான் என்று உறுதி பட எப்படிச் சொன்னாய்?'' என்று கேட்டான். உசேனும் ''நான் அவனை கவனித்த போது அவன் தன் நாக் கால் தன் உதடுகளை நக்கித் தடவிய வாறே அவற்றில் மொய்க்கும் ஈக் களை விரட்டிக் கொண்டிருந்தான். அதனால் தான் அவன் சற்று முன் ஏதாவது இனிப்புப் பண்டத்தைச் சாப்பிட்டிருக்க வேண்டும் எனவும் நாக்கால் அடிக்கடி தன் உதடுகளைத் துடைத்துக் கொண்டிருந்ததால் அவன் தேனைத்தான் குடித்திருக்க வேண்டு மெனவும் ஊகித்து அறிந்தேன்'' என்றான்.

சுல்தானும் ''உசேன்! நீ எதையும் உன்னிப்பாக கவனிக்கிறாய். அத னால் எதையும் உடனுக்குடன் கண் டறிந்து சொல்லியும் விடுகிறாய். இப்படிப்பட்ட கூரான அறிவும் அற்புத சக்தியையும் கொண்ட ஒரு வனைக் காண முடியாதுதான். எனவே நான் உன்னை மிகவும் பாராட்டுகிறேன்'' என்று மகிழ்ச்சி ததும்பக் கூறினான்.





# மாமன்னர் அசோகர்

## 4

(பிந்து சார மன்னனுக்கு வயதாகி விட்டது. கிரேக்கர்களின் தூண்டுதலால் தட்சசீலத்தில் கலகம் மூண்டுள்ளது என்ற செய்தி மன்னனுக்குக் கிடைத்தது. முதலமைச்சரின் யோசனைப்படி மன்னன் தன் ஆறு புதல்வர்களையும் கூட்டி தட்சசீலக் கலகத்தை அடக்க அவர்களில் யார் படைக்குத்தலைமை ஏற்றுப் போகப் போகிறார்கள் என்று கேட்டான். அதற்கு அசோகன் தான் முன் வந்தான். அதன்பிறகு...)

அன்று மாலை அரச குமாரன் அசோகன் சேனாதிபதியைக் காணச் சென்றான். முதலமைச்சர் 'சேனாதிபதிக்குதட்சசீலத்தின் நிலைமையை விவரமாகக் கூறி இருந்ததால் அவன் படைகளைத் தயார் நிலையில் வைப்பதில் முனைந்திருந்தான். அவன் அசோகனைக் கண்டதும் வணங்கி ''இளவரசே! நானும் உங்களுடன் தட்ச சீலத்திற்கு வர எண்ணுகிறேன்'' என்றான்.

அசோகனும் ''நீங்கள் காட்டும் பரிவுக்கு நன்றி. ஆனால் மன்னரின் உடல் நிலை சரியாக இல்லாத போது தாங்கள் தலை நகரில் இருப்பது தானே சரி! ஆகையால் நீங்கள் இங்கேயே இருங்கள். நம்பிக்கைக்குப் பாத்திரமான இரு படைத் தலைவர்களை என்னோடு தட்சசீலத்திற்கு அனுப்புங்கள் அது போதும்'' என்று கூறினான்.

சேனாதிபதியும் ''நீங்கள் சொல்வது சரியே. இந்த நிலையில் மன்ன



இதையெல்லாம் பார்த்த மன்னனின் மூத்த மகனான சுசிம்மனுக்கு பொறாமை ஏற்பட்டது. அவன் ரகசியமாக சேனாதிபதியை சந்தித்து ''எங்கேயோ நடக்கும் ஒரு சிறு கலகத்தை அடக்க நீங்கள் ஏதோ ஒரு பெரிய போருக்கான ஆயத்தங்களைச்செய்து கொண்டிருக்கிறீர்களே! இந்த ஆர்ப்பாட்டம் தேவை தானா?'' என்று கேட்டான்.

அதைக் கேட்ட சேனாதிபதி திடுக்கிட்டானாயினும் தன்னை சமாளித்துக் கொண்டு ''இளவரசே! எதிரியின் பலத்தைக் குறைவாக மதிப்பிடுவது சரியல்ல. பாம்பு சிறியதானாலும் பெரிய தடி கொண்டு தான் அடித்துக் கொல்ல வேண்டும். இந்தக் கலகத்தைத் தூண்டி விடும் கிரேக்கர்கள் தந்திரம் மிக்கவர்கள். அறிவாளிகள், பணம் படைத்தவர்கள், உள்ளூரிலுள்ளவர்களைத் தம் கைக்குள் போட்டுக் கொண்டு அவர்களைக் கொண்டு நம்மை எதிர்க்கிறார்கள். இப்படிப் பட்டவர்களை எதிர்க்க இளவரசர் அசோகர் முதன் முறையாகச் செல்வதால் அவர் வெற்றி பெற்று திரும்பி வருவதற்காக எல்லா வழிகளையும் செய்து கொடுக்க வேண்டிய கடமை என்னுடையது. மேலும் இது அரச குடும்பத்தின் கௌரவப் பிரச்னையும் ஆகும்'' என்று கூறினான்.

சுசிம்மன் கேலியாகச் சிரித்தவாறே ''யாருடைய கௌரவம் பற்றிப் பேசுகிறீர்கள்? ஓஹோ! மகத நாட்டின் வருங்கால மன்னரான மேன்மை தங்கிய அசோகரின் கௌரவம் பற்றியா?'' என்று கேட்டான். சேனாதிபதியும் ''இந்நாட்டில் மன்னராகப்

ரின் பக்கத்தில் நான் இருக்க வேண்டியது மிகவும் அவசியமே நீங்கள் கூறியதை வரவேற்கிறேன். உங்களுடன் நம் படையின் சிறந்த படைத் தலைவர்களைத் தேர்ந்தெடுத்து அனுப்புகிறேன். அதற்கான ஏற்பாடுகளையும் இப்போதே செய்ய ஆரம்பித்து விடுகிறேன்'' என்றான்.

அசோகனும் ''மிக்க மகிழ்ச்சி'' எனக் கூறி விடைபெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றான். அந்த விநாடி முதல் படைகள் தட்ச சீலம் செல்ல வகுக்கப்பட்டன. அரண்மனைக்கு எதிரே இருந்த பரந்த மைதான வெளியில் யானைப் படை, குதிரைப் படையென யாவும் அணி வகுத்து நின்றன. படை வீரர்கள் வாட்கள், கேடயங்கள், ஈட்டிகள் என எடுத்துக் கொள்வதில் மும்முரமாக ஈடுபட்டிருந்தார்கள்.

போகிறவர் தாங்கள்தான் என்றும் அசோகரல்ல என்றும் கேள்விப்படுகிறேன். தட்சசீலக்கலகங்களை அடக்கத் தாங்களே படையுடன் செல்வதாகக் கூறி இருக்க வேண்டும். நீங்கள் தட்சீலம் போய் கலகத்தை அடக்கி வெற்றியுடன் திரும்பி வந்தால் மகத மக்கள் மகிழ்ந்து தங்களைப் பாராட்டி வரவேற்றிருப்பார்கள் நீங்கள் மக்களின் மதிப்பையும் கௌரவத்தையும் அப்போது பெற்றிருக்கக் கூடும். ஆனால் அந்தப் பொன்னான வாய்ப்பை நீங்கள் கை நழுவ விட்டு விட்டீர்கள்'' என்றான்.



அப்போது சுசிம்மனும் ''சேனாதிபதியாரே! நீங்கள் மட்டும் இப்போது என் பக்கம் சேர்ந்து இருந்தால் நான் தட்சீலத்திலிருந்து வெற்றியுடன் திரும்பி வந்தவனாக ஆகிவிட முடியும்'' என்றான் தாழ்ந்த குரலில் ''அதெப்படி? எனக்குப் புரியவில்லையே'' என்றான் சேனாதிபதி.

சுசிம்மனும் ''இப்போதும் கூட நான் படைக்குத் தலைமை தாங்கி தட்சசீலம் போகலாம். அதற்கு உங்கள் உதவி தேவை. நான் இப்போது கூறுகிறபடி செய்தால் நான் மன்னனான பின் உங்களை நல்லவிதமாய் கவனித்துக் கொள்வேன். இந்தப் படை எடுப்பில் அசோகன் தோற்க வேண்டும். அப்போது நான் படையின் தலைமையை ஏற்று தட்ச சீலத்தில் உங்கள் உதவி பெற்று வெற்றி அடைந்து தலை நகருக்குத் திரும்பி வருவேன். இதனால் அந்த வேலைக்காரியின் மகன் அசோகனின் கர்வம் அடங்கும். அதனால் இப்போது அசோகனுடன் அதிக பலமில்லாத படையை அனுப்ப வேண்டும். அவனோடு நீங்கள் போகக் கூடாது. அவனுக்கு உதவ திறமையற்ற இரு படைத் தலைவர்களை அனுப்ப வேண்டும். இவ் விஷயத்தில் நான் உங்களை நம்புகிறேன். இந்த விஷயம் நம் இருவருக்குள் இரகசியமாக இருக்க வேண்டும்'' என்றான்.

சேனாதிபதி வெறித்து சுசிம்மனைப் பார்த்தான். அப்போது சுசிம்மன் ''நீங்கள் நான் கூறுகிறபடி செய்தால் உங்களுக்குத்தான் பிற்காலத்தில் நல்ல லாபம்'' என்றான். அப்போது சேனாதிபதி ''இளவரசே! என் நேர்மையையும் ராஜ விசுவாசத்தையும் பரீட்சித்து பார்க்கிறீர்களா?'' என்று கேட்டான். சுசிம்மனும் ''இல்லை. அசோகன் கர்வம் அடங்க வேண்டும். அதுதான் என் விருப்பம். நான்



சொன்னதெல்லாம் நடக்கும். அந்த வாக்குறுதி அளிக்கிறேன்'' என்றான்.

சேனாதிபதியும் ''ஓ! அப்படியா? நீங்கள் கூறுவது என்னை பிரமிக்க வைக்கிறது. ராஜத் துரோகம் செய்ய நான் ஒருப்போதும் சம்மதிக்க மாட்டேன்'' என்றான். அதைக் கேட்ட சுசிம்மனின் முகம் கருத்தது. அவன் ''சேனாதிபதியாரே! அப்படியானால் நான்கூறியபடி நீங்கள் நடக்கப் போவதில்லையா?'' என்று அதட்டும் குரலில் கேட்டான்.

சேனாதிபதியும் ''ஒருக்காலும் முடியாது''எனவே சுசிம்மனும் ''அப்படியானால் நான் வேறொரு சேனாதிபதியைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளத் தான் வேண்டி வரும்'' என்றான். சேனாதிபதியும் ''அது நீங்கள் மன்னரான பிறகு செய்து கொள்ளலாம். ஆனால் அரசகுடும்பத்தில் இம்மாதிரி சூழ்ச்சிகள் நடந்தால் கெட்ட விளைவு தான் ஏற்படும். எனவே நான் சொல்வதை தயவு செய்து...'' எனக் கூறிக் கொண்டிருக்கும் போதே சுசிம்மன் குறுக்கிட்டு ''சேனாதிபதியே! உம் அறிவுரை ஒன்றும் எனக்குத் தேவை இல்லை'' எனக் கூறிவிட்டு அங்கிருந்து சென்றான்.

சுசிம்மனின் வக்கிர புத்தியைக் கண்டு வெறுப்படைந்த சேனாதிபதி மீண்டும் தன் வேலையில் தீவிரமாக ஈடுபட்டு படைகளைத் தேர்ந்தெடுப்பதில் கவனம் செலுத்தலானான். மறுநாள் அசோகன் தேர்ந்தெடுக்கப்பட்ட படைகளுடன் தட்சசீலத்திற்குக் கிளம்பினான். அசோகனை வழி அனுப்ப வந்த சேனாதிபதி அவனிடம் ''இளவரசே! உங்கள் முயற்சி வெற்றி பெற வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். நீங்கள் அதனை மிகவும் சிரமப்படாமலேயே அடைந்து விடுவீர்களென நான் நம்புகிறேன். இன்னொரு முக்கிய விஷயம். உங்களுக்கு மெய்க்காப்பாளர்களாக பனிரெண்டு வீரர்களைத் தேர்ந்தெடுத்து நியமித்திருக்கிறேன். ஆனாலும் நீங்களும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும் வெற்றி பெற்று நீங்கள் திரும்பிய பின் உங்களுக்கு மேலும் சில விஷயங்களைக் கூறுகிறேன்'' என்றான்.

மாலைப் பொழுதாகி இன்னமும் இருட்டவில்லை. அப்போது அசோகன் தன் படைகளுடன் தட்சசீல நகர எல்லையை அடைந்தான். அங்கு மலை அடிவாரத்தில் தங்க அவனது படைகள் கூடாரங்களை அமைக்கலாயின. மறுநாள் காலையில் கலகக்காரர்



களின் தலைவர்களைச் சந்தித்துப் பேச்சு வார்த்தைகளை நடத்தத் தன் தூதர்களை அனுப்பினான். கலகக் காரர்கள் சில அரசாங்க அதிகாரி களைக் கொன்றும் வேறு சில அதி காரிகளைத்தலைநகரிலிருந்து விரட்டி யும் இருந்தார்கள். தட்சசீலம் அவர் களது கையில்தான் இருந்தது.

அசோகனின் தூதர்கள் கலகக் காரர்களைச்சந்தித்து! ''மன்னர் உடல் நலம் குன்றி இருக்கிறார். இந்த நிலை யில் பிரச்னை எதுவானாலும் அமைதி யான முறையில் பேச்சு வார்த்தைகள் நடத்தி முடிவு காணவே விரும்பு கிறார். உங்கள் கோரிக்கைகள் என்ன வென்று கூறினால் மன்னர் அவற் றைப் பரிசீலிப்பார்'' என்று கூறினார் கள். கலகக்காரர்கள் தம் கோரிக்கை களைக் கூற அவகாசம் வேண்டு மெனக் கூறவே தூதர்களும் அதற்கு இணங்கி அங்கிருந்து சென்றார்கள்.

தூதர்களை அனுப்பிய பின் அசோ கன் தன் வீரர்களை யாத்திரீகர்கள் போலவும் வியாபாரிகள் போலவும் பிச்சைக்காரர்கள் போலவும் வேடம் அணியச் சொல்லி ரகசியமாக நகருக் குள் போய் கலகக்காரர்களின் நடவடிக் கைகளை கவனித்து வரும்படி அனுப் பினான். தினமும் இரவில் ஒரு குறிப் பிட்ட வீட்டில் கலக்க்காரர்கள் கிரேக் கர்களைச் சந்தித்து அவர்களிடமிருந்து கட்டளைகளைப் பெறுகிறார்கள் என்ற விஷயம் அசோகனிடம் தெரி விக்கப்பட்டது.

அன்றிரவும் அவ்வாறு கலகக்காரர் களும் கிரேக்கர்களும் கூடிப் பேசப் போகிறார்கள் என்று அறிந்த அசோ கன் மாறு வேடம் அணிந்த தன் வீரர் களிடம் அந்த வீட்டைச் சூழ்ந்து நிற் கும் படிக் கட்டளை இட்டான். அதன் பின் மகதப் படைகள் 'குபீரென்று தட்சசீல நகருக்குள் பாய்ந்து தாக்கு தலை ஆரம்பித்தன. கலகக்காரர்களும் கிரேக்கர்களும் பேசிவிட்டு அந்த வீட்டிலிருந்து வெளியே வந்தபோது அசோகனின் வீரர்கள் அவர்களில் ஒருவன் கூட தப்பி ஓட விடாமல் எல்லோரையும் பிடித்துக்கொண்டார் கள். அவர்கள் திமிறிய போது அசோக னின் வீரர்கள் அவர்களை அடக்கி விட்டார்கள்.

கலகக்காரர்களின் சிறிய படை ஒன்றும் இருந்தது. ஆனால் அதற்குச் சரியான பயிற்சி அளிக்கப்பட்டிருக்க வில்லை. போர் முறைகளை அதன் வீரர்கள் அறிந்திருக்கவில்லை. அத னால் பலர் அகப்பட்டார்கள். சிலர்

ஓடிப் போனார்கள். இன்னும் சிலர் இறந்தும் போனார் கள்.

விடிவதற்குள்கலகக்காரர்கள்யாவரும் பிடிபட்டு விட்டனர். தட்சசீலம் அசோகனின் வசம் வந்து விட்டது. கலகக்காரர்களையும் அவர்களது தலைவர்களையும் அடித்து உதைத்து அசோகனின் வீரர்கள் அவர்களைத் தெருக்களின் வழியே இழுத்துக் கொண்டு போய் நகரின் நடுவே பெரிய இடத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள். அங்கு ஒரு உயர்ந்த இடம் இருந்தது. அதன் மீது கலகக் காரர்களை அசோகனின் வீரர்கள் ஏற்றி நிறுத்தினார்கள். கலகக்காரர்கள் பிடிபட்டார்களென்றும் அவர்களைப் பார்க்க மக்கள் பொது இடத்திற்கு வரலாமென்றும் பறை சாற்றப்பட்டது.

மக்கள் அங்கு திரளாகக் கூடினார் கள். சற்று நேரத்தில் அசோகனும் குதிரை மீது அமர்ந்து அங்கு வந்து சேர்ந்தான். அவன் கலகக்காரர்களைப் பார்த்து ''உங்களுக்கு ஏதாவது குறைகள் இருந்திருந்தால் அவற்றை நீங்கள் அதிகாரிகளிடம் தெரிவித் திருக்க வேண்டும். ஆனால் நீங்கள் அதிகாரிகளைக் கொன்று கலகம் செய்து கொள்ளை அடித்தீர்கள். யார் உங்களை இவ்வாறு செய்யும்படித் தூண்டியது?'' என்று கேட்டான்.

கலகக்காரர்கள் தலை குனிந்து கொண்டு பேசாமல் நின்றார்கள். சற்று நேரத்திற்குப் பின் ஒருவன் ''நாங்கள் எங்கள் குறைகளை அதிகாரிகளிடம் கூறிப்பார்த்தோம். ஆனால் அவர்கள் தாம் அவற்றைக் காது கொடுத்து கேட்கவே இல்லை'' என்றான். அப்போது அசோகன் ''அதிகாரிகள் அசட்டையாக இருந்தார்களென்றால் நீங்கள் தலை நகருக்கு வந்து முதலமைச்சரிடமோ அல்லது மன்னரிடமோ முறையிட்டிருக்கலாமே. ஏன் அவ்வாறு செய்யவில்லை?'' என்று கேட்டான்.



அதற்கு அவர்கள் எவ்வித பதிலும் கூறவில்லை. அப்போது அசோகன். ''உங்கள் குறைகளை மன்னரிடம் கூறாமல் மாற்று நாட்டுக்காரர்களான கிரேக்கர்களிடம் ஏன் போனீர்கள்? நம் நாட்டு விவகாரங்களில் அவர்களது தலையீடு எதற்கு?'' என்று கேட்டான். அதற்கும் கலகக்காரர்களிடமிருந்து எவ்வித பதிலும் வரவில்லை.

அசோகனும் ''கிரேக்கர்களும் சுயநலக்காரர்களான சில உள்ளூர் வாசிகளும் சேர்ந்து சதி செய்து புரிந்த கலகமே இது என்பது தெளிவாகத் தெரிகிறது. ஒரு காலத்தில் இப்பகுதி கிரேக்கர்களின் நாட்டில் சேர்ந்திருந்தது. மௌரிய வம்சத்தை நிறுவிய சந்திரகுப்தர் கிரேக்கர்களை இப்பகுதியிலிருந்து துரத்தினார். அந்த அவமானத்தை கிரேக்கர்கள் இன்னமும் மறக்கவில்லை. இதை நாம் புரிந்து கொண்டாலும் கிரேக்கர்களுடன் சேர்ந்த இவ்வூர் வாசிகளை நாம் மன்னிக்கவே முடியாது. துரோகிகளாகி நம் நாட்டை அன்னியர்களுக்குக் காட்டிக்கொடுத்தவர்கள். எனவே இவர்களுக்குத் தக்க தண்டனையை விதிக்க வேண்டும்'' என்று சிங்கம் போல கர்ஜித்து கம்பீரமாகக் கூறினான்.

அவர்களுக்கு என்ன தண்டனை விதிக்கப் படப்போகிறது என்று அங்கு கூடி இருந்தவர்கள் யாவரும் ஆவலுடன் பார்க்கலாயினர் அப்போது அசோகன் ''மகத நாட்டில் கலகத்தைத் தூண்டிவிட்ட இந்த கிரேக்கர்களுக்கு மரணத் தண்டனை விதிக்கப் படுகிறது. இவர்களோடு சேர்ந்த சில உள்ளூர்க்காரர்களான தேசத் துரோகிகளுக்கும் அதே தண்டனைதான் விதிக்கப்படுகிறது''என்றான்.

அப்போது கலகக்காரர்களில் ஒருவன் ''இளவரசே! எங்களை மன்னித்து விடுதலை செய்யுங்கள். நாங்கள் அறிவிழந்து இப்படிச்செய்து விட்டோம்'' என்று கதறினான். அசோகனோ ''துரோகிகளுக்குக் கருணை காட்டவே கூடாது. இந்த தண்டனை மற்றவர்களுக்கு ஒரு எச்சரிக்கையாக இருக்கட்டும்'' என்று உறுதியான குரலில் கூறினான்.

மறுநிமிடமே அந்த துரோகிகள் அனைவரும் தூக்கிலிடப்பட்டார்கள்.

**(தொடரும்)**






# தன் வினை தன்னைச் சாரும்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து'' மன்னனே! இந்த பயங்கர நடுநிசியில் இவ்வளவு சிரமப் படுகிறாயே. இது எதற்கு? ஏதாவது அற்புத சக்தியை அடையவா? அவ்வித சக்திகளைப் பெற எவ்வளவோ வழிகள் உள்ளன. அவற்றில் தவம் புரிவதும் ஒன்று. தவச் சிரேஷ்டர்கள் அற்புத சக்திகளைப் பெறுவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. ஆனால் அவர்கள் அச்சக்திகளைத் தம்முடைய நலனுக்கல்லாமல் பிறருக்கு நன்மை புரியவே பயன்படுத்துகிறார்கள். அவ்வாறு செய்யாமல் அதை அவர்கள் தம் சுயநலனுக்காகப் பயன்படுத்தினால் அவர்கள் விரும்பியது நடக்

## வேதாளம் சொல்லும் கதை



காது. இதைப் பற்றிய கதை ஒன்றைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்'' என்று கூறித் கதை சொல்ல ஆரம்பித்தது.

ஒரு ஊரில் தினகரன் - சுதாகாரன் என்ற இரு சகோதரர்கள் இருந்தார்கள். அண்ணன் தினகரன் வியாபாரம் செய்து வரலானான். சுதாகாரனையும் தன்னோடு சேர்ந்து வியாபாரம் செய்யுமாறு கூறினான். ஆனால் தம்பி சுதாகரனோ ''நான் பல நாடுகளுக்குப் போய்ப் படித்து விட்டு வரப் போகிறேன். அதனால் தந்தை விட்டுப் போன சொத்தில் என் பங்கைப் பிரித்து கொடு'' என்றான்.

தினகரனும் ஊர்ப் பிரமுகர்கள் முன்னிலையில் தன் தந்தை விட்டுப் போன சொத்தை இரு சமபாகங்களாக்கி ஒரு பாகத்தைத் தம்பியிடம் கொடுத்தான். அதைப் பெற்றுக் கொண்ட சுதாகரன் எங்கெங்கோ அலைந்து திரிந்தும், போக விலாசங்களில் மூழ்கியும் தனக்குக் கிடைத்ததை எல்லாம் தொலைத்து விட்டுத் தன் ஊருக்கே மறுபடியும் வந்து சேர்ந்தான். தன் அண்ணனிடம் தான் கொண்டு போன பணத்தையெல்லாம் கொள்ளைக்காரர்கள் கொள்ளை அடித்துக் கொண்டு போய் விட்டதாகக் அவன் கூறினான்.

தினகரனும் ''உனக்குப் பொறுப்பு வரவேண்டும். பொறுப்பு வர திருமணம் செய்து கொள்ள வேண்டும். இந்த ஊரின் கிருபாகரனின் புதல்வி கனகா உனக்கு ஏற்ற மனைவியாவாள். அவளை நீ மணந்து கொள். அவள் கொண்டு வரும் சீர், நகைகளைக் கொண்டு நீ வியாபாரத்தைத் தொடங்கு. கல்யாணமான பின் மனைவிக்குக் கணவனின் சுக துக்கங்களில் பாதி பங்கு உள்ளதால் நீ அவள் கொண்டு வரும் பணத்தை உன் வியாபாரத்திற்குப் பயன்படுத்திக் கொள்வது உன் தன்மானத்திற்குத் தடையாகக் இராது'' என்றான்.

ஒரு மாதகாலத்துள் சுதாகரனுக்கும் கனகாவிற்கும் திருமணம் நடந்தது. அவனும் வியாபாரத்தை ஆரம்பித்தான். அதில் ஒஹோ என லாபம் வராமல் போனாலும் கஷ்டப்படாமல் நாட்களைக் கழிக்க அவனால் முடிந்தது. நாளடையில் அவனுக்கு மூன்று குழந்தைகளும் பிறந்து விட்டன.

தினகரனுக்கு மட்டும் திவாகரன் என்ற ஒரே மகன்தான் இருந்தான் அவனது பத்தாவது வயதில் அவளது தாய் இறந்து போனாள். தினகரன் தன்

மனைவியின் மீது உயிரையே வைத்தி ருந்தான். அவள் இறந்து போனதும் அவனுக்கு வாழ்க்கை மீது வெறுப்பே ஏற்பட்டது. அவன் தன் தம்பி சுதா கரனை அழைத்து தனது சொத்தை யும் திவாகரனையும் அவனிடம் ஒப் படைத்து விட்டு இமயமலைக்குப் போய்விட்டான். கனகா கெட்டிக்காரி யானதால் சுதாகரனை ஊதாரித்தன மாகப் பணத்தைச் செலவு செய்ய அனுமதிக்கவில்லை.

ஆனால் சுதாகரனுக்கும் கனகா விற்கும் திவாகரனைப் பற்றி ஒரு வித பயமே ஏற்பட்டது. சொத்து முழுவ தும் திவாகரனுடையது. அவன் பெரியவனானதும் அதை அவனிடம் ஒப்படைத்தாக வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் ஊர்ப் பிரமுகர்கள் சும்மா இருக்க மாட்டார்கள். ஆனால் சுதாகரனும் அவன் மனைவியும் திவாகரனின் சொத்தை அபகரித்துக் கொள்ளவே எண்ணினார்கள். அவர் கள் அது பற்றி யோசிக்கவே அதற்கு அவர்களுக்கு ஒரு வழியும் தெரிந்தது. திவாகரனை நல்ல வார்த்தைகள் கூறி எதற்கும் தகுதியற்றவனாக அவனைச் செய்து விடுவது என்று அவர்கள் தீர் மானித்தார்கள்.

ஒருநாள் சுதாகாரன் திவாகரனைத் தன்னருகே அழைத்து ''படித்ததால் நான் கெட்டுப் போனேன். எல்லா வற்றையும் இழந்தேன். அப்போது உன் தந்தை என் படிப்பை நிறுத்தி விட்டு வியாபாரம் செய்யச் சொன்னார். அதனால் முன்னுக்கு வந்து விட்டேன். அதனால் நீயும் உன் படிப்பை நிறுத்தி விடு'' என்றான். திவாகரனும் சுதாகரன் கூறியபடியே



படிப்பை நிறுத்தி விட்டான்.

அதன்பிறகு அவன் திவாகரனிடம் ''உன் தந்தை என் மீது முழு நம்பிக்கை வைத்தே உன்னை என்னிடம் ஒப் படைத்து விட்டுப் போனார். நான் உனக்கு நல்லதுதான் செய்வேன். அதனால் நீ நான் சொல்வதை மட்டும் கேட்டு அதன்படி நட. வேறு யார் என்ன சொன்னாலும் கேட்காதே. நீ நம் வீட்டு வேலைகளை எல்லாம் செய்து பழகிக் கொள்'' என்றான். அன்று முதல் திவாகரன் அந்த வீட்டின் வேலைகளை எல்லாம் செய்யலா னான்.

சுதாகரன் ஒருநாள் திகாகரனிடம் ''நீ இவ்வளவு வேலைகள் செய்ய வேண்டி இருக்கிறதே என்று யோசிக் கிறாயா? இந்த மாதிரி எல்லாம் நினைக்காதே. இப்படியெல்லாம்



நினைத்துத்தான் உன் தந்தை வாழ்க்கை மீது வெறுப்பு கொண்டு இமயமலைக்குப் போய் விட்டார். நீயும் வீண் யோசனை செய்து இமய மலைக்குப் போய் விடாதே'' என்று கூறினான். அப்போது முதல் திவா கரன் எதைப் பற்றியும் யோசிப்பதை நிறுத்தி விட்டான்.

திவாகரனை இவ்வாறு சுதாகரன் நடத்துவது கண்டு பலர் திவாகரன் பால் பரிதாபம் கொண்டனர். சிலர் சுதாகரனிடம் அவன் செய்வது சரி யல்ல என்று சொன்னார்கள். ஆனால் சுதாகரனோ ''நான் என்ன செய்வது? அவன் சன்னியாசி போல வாழ விரும் புகிறான். என்னதான் முயன்றாலும் அவன் எங்களைப் போலவும் நாங்கள் அவனைப் போலவும் வாழ முடி கிறதா? அவரவர் அதிர்ஷ்டம் அவர வர்களுக்கு. அதை ஒருவர் மற்றவ ருக்கு மாற்றிவிட முடியுமா?'' என்று எல்லோரிடமும் கூறி வரலானான்.

இதைக் கேட்ட திவாகரனும் தான் அதிர்ஷ்டக்காரன் என்று எண்ணலா னான். தன் அதிர்ஷ்டத்தைத் தன் சிற்றப்பாவிற்கு மாற்றவும் முடியாது எனவும் எண்ணி மகிழலானான். இப் படியாகப் பத்து ஆண்டுகள் கழிந்தன.

இமயமலைக்குச் சென்ற தினகரன் மன நிம்மதி பெற கொஞ்ச காலம் தவம் செய்தான். அதனால் அவனுக்கு சில அற்புத சக்திகள் கிடைத்தன. அப் போது அவன் மனதில் தன் மகனைப் பார்க்க வேண்டுமென்று ஆசை உண் டாயிற்று. அதனால் அங்கிருந்து கிளம் பித் தன் ஊருக்கு அவன் வந்தான்.

தாடியும் மீசையுமாய் உருமாறிப் போன தினகரனை அவ்வூரில் யாரா லும் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. சுதாகரனால் கூடத் தன் அண்ணனை அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை. தினகரனும் தன் தம்பியிடம்தான் யாரென்பதைத் தெரிவிக்கவில்லை. ஒரு சாது வந்து தன் வீட்டின் முன் நிற்பதைக் கண்ட சுதாகரன் அவரை வரவேற்று மரியா தையுடன் தன் வீட்டிற்குள் அழைத்துச் சென்றான்.

சாது தினகரனுக்குப் பணிவிடை புரிய சுதாகரன் திவாகரனை நியமித் தான். திவாகரனும் பக்தி சிரத்தையு டன் சாதுவுக்குப் பணிவிடை புரிய லானான். கொஞ்ச நேரத்திற்குள் சாது வான தினகரனுக்கு அந்த வீட்டில் நிலைமை புரிந்து விட்டது. திவாகரன் அந்த வீட்டில் எவ்வாறு நடத்தப்படு கிறான் என்பதும் அவனுக்குத்

தெரிந்து போயிற்று.

தினகரன் துக்கம் தாள முடியாமல் ''மகனே! நீ இந்த வீட்டின் எஜமானனாயிற்றே! உனக்கு எப்படி இம்மாதிரி வேலைக்காரனாக இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது?'' என்று கேட்டான். திவாகரனோ ''இது என் அதிர்ஷ்டம்'' என்று மகிழ்ச்சியுடன் கூறினான். அது கேட்டு திகனரன் ''அப்பனே! உன் சிற்றப்பன் மோசக்காரன் உன்னை ஏமாற்றுகிறான்'' எனக் கூறவே திவாகரன் கோபத்தோடு சாதுவைப் பார்த்துவிட்டு உள்ளே ஓடிப் போய் சுதாகரனிடம் ''அந்த சாது உங்களை மோசக்காரர் என்றும் ஏமாற்றுபவர் என்றும் கூறுகிறார். அதைக் கேட்க சகிக்க முடியாமல் நான் ஓடி வந்து விட்டேன். இனி மேல் நான் அவருக்குப் பணி விடை புரிய மாட்டேன்'' என்றான்.

சுதாகரனும் திவாகரனோடு வந்து சாதுவைக் கண்டு ''நீங்கள் உண்மையான சாது என்றே நான் நம்பினேன். ஆனால் எல்லோரும் கூறுவது போல நீங்கள் என்னை மோசக்காரன் என்றும் ஏமாற்றுகிறவன் என்றும் கூறுகிறீர்கள். அதனால் நீங்கள் உண்மையிலேயே ஒரு சாது என்று என்னால் நம்ப முடியவில்லை. என் அண்ணனின் மகன் என் மீது தன் உயிரையே வைத்திருக்கிறான்'' என்றான்.

அதைக் கேட்ட சாதுவான தினகரன் கோபத்தோடு ''நான் உண்மையிலேயே ஒரு சாதுதான். நீ செய்து வரும் ஏமாற்று வேலையை நான் அறிந்து கொண்டு விட்டேன். என் மீது நீ கொண்டுள்ள சந்தேகத்தைப் போக்க திவாகரனுக்கு நான் ஒரு வரமளிக்க



விரும்புகிறேன். திவாகரா! பிறருக்குத் தீங்கு விளைவிக்காமல் உனக்கு என்ன வேண்டுமோ கேள். அதை நான் கொடுக்கிறேன்'' என்றான்.

திவாகரன் சுதாகரனைப் பார்த்தான். சுதாகரனும் வரம் கேட்டு வாங்கிக் கொள் என்று சைகை செய்தான். திவாகரன் சாதுவிடம் ''நான் மிகவும் அதிர்ஷ்டக்காரன். என்னைப் பற்றி யோசித்து முடிவு எடுக்க என் சிற்றப்பா இருக்கிறார். அதனால் எனக்கு எதுவும் வேண்டாம்'' என்றான்.

அப்போது சுதாகரன் கர்வமாகச் சிரித்து ''பார்த்தீர்களா! என் அண்ணனின் மகன் தன்னைப் பற்றி கூட யோசிப்பது இல்லை'' என்றான். அப்போது தினகரனுக்கு தன் தம்பி திவாகரனை எந்த வேலைக்கும் பயன் படாதபடி செய்து விட்டான் என

தெரிந்து விட்டது என்ன செய்யலா மெனதினகரன் யோசித்துக்கொண்டி ருக்கும் போதே சுதாகரன் ''திவாகரா! சாது எதாவது கொடுப்பதாகக் கூறி னால் அதை ஏற்காதிருப்பது சரியல்ல. உனக்குக் கேட்பதற்கு என்று எதும் இல்லாமல் போனாலும் உன் சிற்றப் பாவை சந்தோஷப்படுத்துவதற்கா வது எதாவது கேள். அவர் கண்டிப் பாக அதைக் கொடுப்பார்'' என்றான். திவாகரனும் சற்றும் தயங்காமல் ''இனி என் அதிர்ஷ்டமெல்லாம் என் சிற்றப்பாவுக்குப் போய் விட வேண் டும். சிற்றப்பாவின் அதிர்ஷ்டம் எல் லாம் எனக்கு வந்துவிட வேண்டும்'' என் றான். சாதுவான தினகரன் மகிழ்ந்து போய் ''அப்படியே நடக்கும்'' எனக் கூறி திவாகரனை ஆசீர்வதித்தான்.

அந்த வரம் உடனே பலித்தது. திவா கரன் வீட்டு எஜமானன் ஆனான். சுதா கரன் அவ்வீட்டு வேலைக்காரனாகி விட்டான். சாதுவான தினகரன் தான் யாரென்பதைத் தெரிவிக்காமலேயே அங்கிருந்து இமயமலைக்கே சென்று விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! தினகரன் திவாகரனுக்கு வரம் கொடுத்தது சுயநலம் கருதித் தானே. அப்படி இருந்தும் அவன் பெற்ற சக்தி எவ்வாறு பலனை அளித் தது? இக்கேள்விக்குச் சரியான பதில் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''சுதாகரன் திவா கரனை தன் அண்ணனின் மகன் என்று கூட நினைத்துப் பாராமல் அவனை எதற்கும் பயனற்றவனாக ஆக்கிவிட் டான். அதனால் திவாகரனுக்கு சுயமா கச் சிந்திக்கும் சக்தியே போய் விட் டது. அதனால் தானே அதிர்ஷ்டக்கா ரன் என எண்ணிய திவாகரன் தன் போல சுதாகரன் அதிர்ஷ்டக்காரன் ஆகட்டும் என்றே சாதுவிடம் வரம் கேட்டான். ஒரு நய வஞ்சகனிடமி ருந்து ஒரு அப்பாவியைக் காப்பாற்று வது என்ற நிலையில்தான் சாது தின கரனின் வரம் பலித்தது'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதி லால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# அது இல்லையே?

விகடகவி விநாயகராம் தன் பேச்சால் எல்லோரையும் சிரிக்க வைப்பவன். இதனால் அந்நாட்டு மன்னன் மகிழ்ந்து அவனுக்கு கோட்டையின் ஓரமாக உள்ள ஒரு சிறு வீட்டை மானியமாக அளித்தான். விகடகவியும் அக்கம் பக்கத்தவர் தொல்லை என்று இல்லாமல் சில வருடங்கள் அந்த வீட்டில் சுகமாக இருந்தான்.

ஆனால் அந்த சந்தோஷத்தில் மண்ணை வாரிப் போடுவது போல விகடகவியின் வீட்டிற்குப் பக்கத்தில் ஒரு பயில்வான் வீட்டைக் கட்டிக் கொண்டு தன் நாயுடன் அதில் இருக்கலானான். அந்த நாயோ இரவு முழுவதும் குரைத்து விகடகவியின் தூக்கத்தைக் கெடுத்தது. இரண்டு மூன்று நாட்கள் பொறுத்துப் பார்த்த விகடகவி நான்காவது நாள் பயில்வானைக் கண்டு ''இதோ பாரப்பா! இரவு முழுவதும் உன் நான் குரைத்து என் தூக்கத்தைக் கெடுக்கிறது. அதை குரைக்காமல் இருக்கச் செய்'' என்றான்.

பயில்வானோ ''நாய் புதிய மனிதர்களையும் திருடர்களையும் பார்த்தால் குரைக்கத்தான் குரைக்கும். அதை எப்படிக் கட்டுப்படுத்த முடியும்?'' என்றான். அதைக் கேட்ட விகடகவி ''ஓ! உன்னால் கட்டுப்படுத்த முடியாதா? நானே என் வழியில் கட்டுப்படுத்துகிறேன்'' என்றான். பயில்வானும் ''அது வேட்டை நாய். பக்கத்தில் போனாலே கடித்துக் குதறி விடும். ஜாக்கிரதை'' எனக் கூறினான்.

விகடகவியோ அதைக் கேளாதவன் போலத் தன் வீட்டிற்குச் சென்றான். அன்றிரவும் வழக்கம் போல நாய் குரைக்கவே விகடகவி எரிச்சல் அடைந்து ஒரு தடியை எடுத்துக் கொண்டு போய் அந்த நாயை பலமாக அடித்தான். சங்கிலியோடு பிணைக்கப்பட்டிருந்ததால் நாய் ஓட முடியாமல் பலமாகக் குரைத்தது.

நாய் குரைப்பதைக் கேட்டு பயில்

—எஸ். சோபினி—

வான் வீட்டிலிருந்து வெளியே வந்த வாறே ''யாரடா அது? திருடவா வந்தாய்?'' என்று கோபத்தோடு கூறி கையில் தடியோடு நின்றவனைப் பார்த்தான். அடுத்த நிமிடமே நிற்பவன் தன் பக்கத்து வீட்டுக்காரனான விகடகவி என்று கண்டு அவன் ''மரியாதையாகப் போய்விடு. நாயை அடித்தால் உன்னையும் அடிப்பேன்'' என்றான்.

விகடகவியும் ''நாயின் உடலில் அடித்தால் நீ என்ன செய்வாய்?'' என்று கேட்டான். பயில்வானும் ''உன் உடலின் எலும்புகளை எல்லாம் அடித்து நொறுக்கி விடுவேன்'' என்றான். விகடகவியும் ''அதன் காலை அடித்து ஒடித்து நொண்டியாக்கி விட்டால் அப்போது என்ன செய்வாய்?'' என்று கேட்டான். பயில்வானும் ''நானும் உன் கால்களை ஒடித்து நீ நடமாட முடியாமல் செய்து விடுவேன்'' என்று பயில்வான் உறுமினான்.

அப்போது விகடகவி ''அதன் மண்டையை ஒரு போடு போட்டு உடைத்தால் என்ன செய்வாய்?'' என்று கேட்க பயில்வானும் ''உன். மண்டையையும் ஒரே அடியில் சுக்கு நூறாகச் செய்து விடுவேன்'' என்றான். அதைக் கேட்ட விகடகவி சற்று யோசித்து விட்டு'' சரி. நான் நாயின் வேறொரு அவயவத்தை அடிப்பேன். பதிலுக்கு உன்னால் என்னை அதே விதமாக அடித்து அப்படிச் செய்ய முடியாதே'' என்று கூறி பலமாகச் சிரித்தான். பயில்வானும் ''ஓ! என்னையா ஏமாற்றிவிட முடியும்? அது மட்டும் நடக்காது. அப்படி எதை நீ அடிக்கப் போகிறாய்? சொல் பார்க்கலாம்'' என்றான்.

விகடகவியும் ''நாயின் வாலைத்தான். வாலின் நுனியிலிருந்து அடித்து கொண்டே போவேன். அப்போது என்ன செய்வாய்?'' என்று கேட்டான். அதைக் கேட்ட பயில்வானுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவன் பலமாகச் சிரித்தவாறே ''ஆமாம். உனக்கு வால் இல்லைதான். அதனால் உன்னை பதிலுக்கு அது போல அடிக்க முடியாதுதான்'' என்றான்.

அவன் விகடகவியின் அறிவைப் பாராட்டி இனிமேல் நாயைக் குரைக்க விடாமல் பார்த்துக் கொள்வதாகக் கூறி விகடகவியை அனுப்பி வைத்தான்.






# சென்னை மாநகரம்

கருத்து: **மீரா நாயர்** ◆ ஓவியர்: **கோபகுமார்**

பிரான்சிஸ் டே செண்ட் ஜார்ஜ் கோட்டையைக் கட்டிய போது துறைமுக வசதி இல்லாத இடத்தை அவர் தேர்ந்தெடுத்ததற்காகக் கடுமையாக விமரிசிக் கப் பட்டார். கப்பல்கள் அந்த இடத்திலிருந்து சற்று தூரத்தில் நிறுத்தப்பட்டு அவற்றின் சாமான்களும் பயணிகளும் கரை சேரக் கட்டு மரங்களும், படகு களும் பயன்படுத்த வேண்டியதாயிற்று. ஆனால் 1891ல் இங்கு செயற்கை துறைமுகம் அமைக்கப் பட்டது. இன்று சென்னை நாட்டின் பெரிய துறை முகங்களில் ஒன்றாகும்.

மெரினா கடற்கரையின் தெற்கே சான்தோம் சர்ச் உள்ளது. சென்னைக்கு கி.பி. 52ல் வந்ததாக கருதப்படும் செண்ட் தாமஸ் டிடிமஸின் சமாதியின் மீது இது கட்டப்பட்டுள்ளது. அழகிய வேலைப்பாடு கொண்ட கண்ணாடி ஜன்னல்களில் கிருஸ்துவ மதத்தை முதலில் இந்தியாவில் கொண்டு வந்த செண்ட் தாமஸின் வாழ்க்கை வரலாறு சித்தரிக்கப் பட்டுள்ளது. அடையாற்றின் கரையிலுள்ள சான்தோம் பகுதியில் தியசாபிகல் சொசைடியின் தலைமையகம் உள்ளது. இந்த சொசைடி அமெரிக்காவில் மாடம் ப்ளவட் ஸ்கியாலும் கர்னல் ஓல் காட்டாலும் ஆரம்பிக்கப்பட்டு அடையாறில டாக்டர் அன்னி பெசன்ட் நிறுவினார். இவர் நம் நாட்டு விடுதலைப் போரில் முக்கிய பங்கு பற்றியவர்.



**சான்தோம் சர்ச்**

இங்குள்ள அடையாறு நூலகத்தில் கிழக்கத்திய நாகரீகத்தின் பல அபூர்வ நூல்கள் உள்ளன. 165,000 புத்தகங்களும் 20,000 ஓலைச் சுவடிகளும் இந்த மாபெரும் நூலகத்தில் உள்ளன. இந்த சொசைடியில் எல்லா மதத்தினர் வணங்கும் கடவுள்களின் ஆலயங்களும் 200 ஆண்டுகளுக்கு மேலாக இருந்து வரும் பரந்து கிடக்கும் மாபெரும் ஆலமரமும் உள்ளன. இம்மரத்தின் கீழ் ஒரே சமயத்தில் 3000 பேர்கள் நிற்கலாம்.



கலாக்ஷேத்திராவின் கலையரங்கம்

தியசாபிகல் சொசைடியிலிருந்து சற்றுத் தள்ளி தெற்கில் சாஸ்திரீய சங்கீதத்திற்கும் பரதக் கலைக்கும் பெயர் பெற்ற கலாக்ஷேத்திரம் உள்ளது. இதனை 1936ல் நிறுவியவர் திருமதி ருக்மிணி அருண்டேல். இவர் பிரம்ம ஞான சபையின் உறுப்பினர். 1930ல் எல்லாம் பரத நாட்டியம் கோவில்களில் தேவதாசிகளால் மட்டுமே ஆடப்பட்டு வந்தது. மரியாதையான குடும்பத்தவர் பரத நாட்டியத்தைத் தம் பெண்கள் கற்பது சரியல்ல என்று கருதினார்கள். இந்த மனப்பான்மையை முற்றிலும் மாற்றி சென்னையை பரதக் கலையின் மையமாக ஆக்கிவிட்டவர் திருமதி ருக்மினி தேவி அருண்டேல் தாம்.

இன்னும் கொஞ்ச தூரம் உள்ளே சென்றால் கிண்டி தேசீயப் பூங்கா உள்ளது. இங்கு அழகிய மான்கள் உள்ளன. ராஜ்பவன் (ஆளுனர் மாளிகை) இந்திய நுண்கலைக் கழகம், கிண்டி பொறியியல் கல்லூரி இவை யாவும் அருகருகே உள்ளன. இங்கு பாம்புப் பண்ணையும் குறிப்பிடத்தக்க இடமாகும். இதை ரோமுலஸ் விடாகர் என்ற அமெரிக்கர் நிறுவினார். இதில் மக்கள் பலவிதப் பாம்புகளை பார்க்கவும் தொடவும் புகைப் படம் எடுக்கவும் முடியும்.

சென்னை தொன்று தொட்டு இருந்து வரும் மயிலாப்பூரையும் திருவல்லிக்கேணியையும் தன்னுள் கொண்டது! தலபுராணப்படி சிவபிரானும் பார்வதி தேவியும் பேசிக் கொண்டிருக்கையில் பார்வதி தேவியின் கவனம் எங்கோ போய்விட அவர் சிவபெருமான் கூறியதைக் கேட்கவில்லையாம் இதனால் சிவபிரான் கோபம் கொண்டு பார்வதிதேவியை ஒரு மயிலாகப் போகும்படிச் சபித்து விட்டாராம்.

பார்வதி தேவியும் மயிலாக இருந்து கடும் தவம் புரிந்து சிவபிரானின் அருள் பெற்றுத் தம் பழைய திரு உருவை அடைந்தார். அவர் தவம் செய்த இடம்தான் மயிலாப்பூர் எனப் பெயர் பெற்றது. மயிலாப்பூர் கோவிலில் ஒரு புன்னை மரத்தின் கீழுள்ள மயில் வடிவத்தின் பார்வதி தேவியை பக்தர்கள் வழிபட்டு வருகிறார்கள். இந்தப் புன்னை மரம் சென்னையிலேயே மிகப் பழமையானதெனக் கருதப்படுகிறது.



பார்த்தசாரதி கோவில்

கபாலீஸ்வரரின் கோவிலுக்குச் சற்றுத் தொலைவில் சென்னையில் மிகப் பழையதான லஸ் சர்ச் உள்ளது இதை போர்த்துக்கீசியர்கள் 1547க்கும் 1582க்கும் மத்திய காலத்தில் கட்டினார்களாம். 'அவர் லேடி ஆப் லைட்'டிற்கு மரியாதை செலுத்த இது கட்டப்பட்டதாம். சில போர்த்துக்கீசிய மாலுமிகள் தம் கப்பல் உடைந்தபோது ஒரு ஒளியைக் கண்டு அதை நோக்கி வந்துபத்திரமாகக் கரையை அடைந்தார்களாம். அவர்கள் கரையை அடைந்ததும் அந்த ஒளி மறைந்துவிட்டதாம். தம் நன்றியைத் தெரிவிக்க அந்த மாலுமிகள் அந்த இடத்தில் கட்டிய சர்ச்தான் லஸ் சர்ச்.

திருவல்லிக்கேணி 1400 வருடங்களுக்கு முன் அமைந்த பழங்கால இடம். இங்குள்ள பார்த்தசாரதி கோவில் மிகப் பழைமையானது. அர்ஜுனனின் தேரோட்டியாக இருந்த கிருஷ்ணரின் கோவில் இது. திருவல்லிக்கேணியிலிருந்து சற்று உட்பகுதியில் சென்றால் வள்ளுவர் கோட்டத்தைக் காணலாம். இது திருக்குறளை அளித்த திருவள்ளுவரின் நினைவாகக் கட்டப்பட்டதாகும். வள்ளுவரின் காலம் கி.மு. முதலாவது நூற்றாண்டு எனக் கருதப்படுகிறது. அவரது 1330 குறள்களும் இங்குள்ள மாபெரும் அரங்கில் பொறிக்கப் பட்டுள்ளன.

இங்கு 33 மீட்டர் உயரத் தேர் உள்ளது இங்கு திருவள்ளுவர் சிலை நிறுவப்பட்டுள்ளது. இந்த அரங்கம் ஆசியாவில் மிகப் பெரியது. ஒரே சமயத்தில்

இங்கு 4000 பேர் அமர வசதி உள்ளது.

மற்றொரு குறிப்பிடத் தக்க இடம் ஆயிரம் விளக்கு மசூதி. இது அண்ணாசாலையில் உள்ளது. இங்கு ஆயிரம் எண்ணெய் விளக்குகள் ஏற்றப்பட்டு வந்ததால் இதற்கு இப் பெயர் ஏற்பட்டது.

சென்னையில் ஒரு பகுதியான கோடம்பாக்கம் 'தென்னிந்திய ஹாலிவுட்' என அழைக்கப்படுகிறது. இங்குள்ள திரைப்படப் பிடிப்பு நிலையங்கள் தென்னிந்திய மொழிகளில் படங்கள் தயாரிப்பதோடு பிற மொழிகளில் திரைப்படங்களை 'டப் செய்தும் கொடுக்கின்றன.

சென்னையின் தொழில் நகரப் பகுதி பெரம்பூராகும். இங்கு ரயில் பெட்டி இணைப்புத் தொழிற்சாலை உள்ளது. இந்திய ரயில்வேக்களுக்கான ரயில் பெட்டிகள் இங்கு உருவாக்கப்படுகின்றன. இத் தொழிற்சாலையின் மருத்துவமனை இதய அறுவை சிகிச்சைக்குப் பெயர் பெற்றது. இதன் அருகேயுள்ள காசி விசுவநாதர் ஆலயம் ஆண்டு தோறும் திருப்பதிக்கு எடுத்துச் செல்லும் திருப்பதிக் குடைகளை வைத்துப் பாதுகாக்கிறது.



திருவள்ளுவர்

இந்தக் கோவிலுக்குச் சொந்தமான ஒரு சத்திரம் உள்ளது. இதற்கு டாக்கர் சத்திரம் என்று பெயர். 1760ல் சென்னையில் முதலில் குடிபுகுந்த குஜராத்திக் குடும்பம் டாக்கருடையது. அக் குடும்பத்தவர் பிரபல நகை வியாபாரிகள். 1804 அக்குடும்பத்தைச் சேர்ந்த இரு பெண்மணிகள் ஒரு தர்ம ட்ரஸ்டைத் துவங்கி அதைக் கொண்டு காசி விசுவநாதர் கோவிலைக் கட்டினார்கள்.



வள்ளுவர் கோட்டம்



# கங்காவே அவன் மனைவி

கிரிபுரம் என்ற ஊரில் கிரிதரன் என்ற இளைஞன் இருந்தான். அவன் ஏழை விவசாயக் குடும்பத்தில் பிறந்தவன். அவன் தன் தந்தைக்கு விவசாயத்தில் உதவாமல் அந் நாட்டு இளவரசியை மணந்து கொள்ளப் போவதாக எண்ணி மனக் கோட்டை கட்டி வரலானான். ஒரு வேலையும் செய்யாமல் இருந்த தன் மகனை அவனது தந்தை வீட்டை விட்டு விரட்டி விட்டான்.

கிரிதரன் அதனால் மனம் கலங்கி விடவில்லை. தன் ஊரை விட்டுக் கிளம்பிய அவன் தலை நகரிலுள்ள தன் மாமனின் வீட்டை அடைந்தான். அவனது மாமன் இராணுவத்திலிருந்து ஓய்வு பெற்ற படை வீரன். அவனது மகள் கங்கா அரண்மனையில் அரசகுமாரியின் முக்கிய பணிப் பெண்ணாகப் பணி புரிந்து வந்தாள்.

கிரிதரனைக் கண்டதும் அவனது மாமன் மகிழ்ச்சியுடன் வரவேற்றான். வாட்ட சாட்டமாய் அழகாயுள்ள கிரிதரனைத் தன் மாப்பிள்ளையாகக்கிக் கொண்டு அரசாங்கத்தில் இராணுவத்தில் ஒரு வேலை வாங்கித் தருவதாகவும் அவனிடம் அவன் கூறினான். கிரிதரனோ ''நான் இராணுவத்தில் படை வீரனாக சேர விரும்பவில்லை. அரண்மனையிலேயே ஓரிடத்தில் உட்கார்ந்து கொண்டு செய்யும் வேலை ஒன்றை வாங்கித் தாருங்கள். வேலையில் அமர்ந்த பின் என் திருமணத்தைப் பற்றிப் பேசலாம்'' என்றான். அவன் கங்காவை மணக்க முடியாது எனக் கூறாமல் முதலில் அரண்மனைக்குள் எப்படியாவது நுழைந்து பிறகு அரசகுமாரியை மணக்கும் வழியைக் காணலாம் என எண்ணிக் கொண்டான்.

கங்காவோ கிரிதரனைப் பார்த்தது முதல் அவனையே தன் கணவனாக மனதில் வரித்து விட்டாள். ஆனால் அவன் படை வீரனாகச் சேர்ந்து தன் வீரத்தைக் காட்ட விரும்பாமல் இருக்-

—பாலாஜி கிருஷ்ணன்—



கிறானே என எண்ணிச் சற்று. மன வருத்தமே அடைந்தாள்.

கிரிதரனுக்கு கங்காவே அரண் மனையில் உட்கார்ந்தபடியே பார்க் கும் வேலை ஒன்றை வாங்கிக் கொடுத் தாள். அதுதான் மணி அடிக்கும் வேலை. கிரிதரன் தன் வேலையை ஒழுங்காகச் செய்து வரலானான். ஆனால் கிரிதரனால் அரசகுமாரியைப் பார்க்கக் கூட முடிய வில்லை.

ஒருநாள் அவன் அரண்மனைத் தோட்டக்காரனிடம் ''அரசகுமா ரியை எங்கே பார்க்கலாம்?'' என்று கேட்டான். அவனோ சிரித்தவாறே ''அரச குமாரியை நாம் பார்ப்பதா? முடியவே முடியாது. நாம் எல்லோ ரும் அவளுக்கு ஒரு அரசகுமாரனுடன் மணமாகும் போது அந்த மண மேடையில்தான் காண முடியும். வேறு எங்கும் அல்ல'' என்று கூறி னான்.

அதைக் கேட்ட கிரிதரனின் மனம் தளர்ந்து போயிற்று. அரச குமாரிக்கு எப்படித்தன் மனநிலையைப் தெரி விப்பது என அவன் யோசிக்கலா னான். அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. அதன்படி அவன் அரண்மனைக்கு தினமும் மலர் கொண்டு செல்பவளை மெதுவாகச் சிநேகிதம் செய்து கொண் டான். ஒரு நாள் அவன் தான் அவளை மிகவும் விரும்புவதாயும் அவளை மணக்கப் போவதாகவும் தெரிவித்து ஒரு கடிதம் எழுதி அது அரசகுமாரி யின் கையில் கிடைத்துவிடும் என்று எண்ணி பூக்காரியின் பூக் கூடைக்குள் மலர்களுக்கிடையே அவளுக்குத் தெரியாமல் சொருகி வைத்து விட் டான். ஆனால் பூக்காரி போன பின். அவனுக்கு பயம் பிடித்துக் கொண் டது. அந்தக கடிதத்தால் தன் வேலை யும் போய் தண்டனையும் கிடைக்கும் என்று அவன் பயப்படலானான்.

அன்றிரவு கிரிதரனின் மன நிலை சரியாகவே இல்லை. எனவே இரவு ஒரு மணிக்கு அடிக்க வேண்டிய மணியை அடிக்க வில்லை. ஆனால் இரவு இரண்டு மணிக்கு இரண்டு அடிக்க வேண்டியதற்கு பதிலாக மூன்று அடித்தான். அதைக் கேட்ட மன்னன் தன் படுக்கையிலிருந்து எழுந்து விட்டான்.

அவன் தினமும் காலை மூன்று மணிக்கே எழுந்து காலைக் கடன் களை முடிப்பவன். ஆனால் தன்னை அழைத்துச் செல்ல எந்த வேலையா ளும் வராமல் படுத்துத் தூங்கிக் கொண்டிருப்பது கண்டு அவன் ஆச்

சரியப்பட்டான். அவன் தன் படுக்கை அறை முன் படுத்திருந்த வேலையாளை எழுப்பி ''ஏன் தூங்கிக் கொண்டிருக்கிறாய்'' என்று கோபத்துடன் கேட்டான்.

அவனும் பரபரப்படைந்து எழுந்து ''அரசே! மணி இரண்டுதான் ஆகிறது வெளியே இன்னும் இருட்டாக இருக்கிறது'' என்று பணிவுடன் கூறினான். மன்னனும் ''அப்படியா? பின் ஏன் மூன்று மணியை அடித்தான்? போய் அந்த மணி அடிப்பவனை இப்போதே இழுத்து கொண்டு வா'' என்று கட்டளை இட்டான்.

வீரன் போய் கிரிதரனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகவே அவனும் நடுநடுங்கியவாறே தான் அரசகுமாரிக்கு எழுதிய கடிதம் கிடைத்து அதற்காக தன்னை தண்டிக்க மன்னர் இழுத்து வரச் செல்லி இருக்கிறார் என்று பதறலானான். வீரன் அவனை மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தினான். மன்னனும் அவனை எரித்து விடுபவன் போலப் பார்த்து ''அடே! நீதான் சற்று நேரத்திற்கு முன் மூன்று மணி அடித்தவனா?'' என்று கேட்டான். கிரிதரன் பயந்து நடுங்கினானே யொழிய பதில் எதுவும் கூறவில்லை. இதைக் கண்ட மன்னனுக்கே அவன் மீது இரக்கம் ஏற்பட்டது. அவன் சற்றுக் கோபம் தனிந்து ''என்னப்பா! நீ எவ்வளவு நாளாக இந்த வேலையைப் பார்த்து வருகிறாய்?'' என்று கேட்டான்.

கிரிதரனும் ''அரசே! இந்த வேலையை இரண்டு மாதங்களாகப் பார்த்து வருகிறேன்'' என்றான் நடுங்கும் குரலில். மன்னனும் அவனை ஒரு



முறை மேலும் கீழும் பார்த்து விட்டு கட்டுமஸ்தான உடலுடன் அவன் இருப்பது கண்டு ''உனக்கு யார் இந்த மணிஅடிக்கும் வேலையைக் கொடுத்தார்கள்? நீ இருக்க வேண்டியது என் இராணுவத்தில். அதனால் சேனாதிபதியிடம் சொல்லி உன்னைப் படை வீரனாக எடுத்துக் கொள்ளச் சொல்கிறேன் இனிமேல் கயிறு பிடித்து இழுத்து நீ மணி அடித்துக் கொண்டிருக்க வேண்டாம். கையில் கத்தி பிடித்துக் கொண்டு நம் எல்லைப் புறத்தில் காவல் புரிய வேண்டியது உன் வேலை'' என்றான்.

கிரிதரன் மன்னனை வணங்கி விட்டுதப்பினேன்பிழைத்தேன் என்று எண்ணி அவரிடம் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றான். ஆனால் தான் அரசகுமாரிக்கு எழுதிய

கடிதம் பற்றிய பயம் இன்னமும் அவனது மனதை விட்டு அகல வில்லை.

மறுநாள் காலை அவன் கங்காவைச் சந்தித்த போது அவள் ''அத்தான்! நீங்கள் உங்கள் ஊரைவிட்டு இங்கே ஏன் வந்தீர்களென்பது எனக்கா தெரியாது? உங்கள் மனதில் உள்ளதை கடிதத்தில் எழுதி அரண்மனைப் பூக்காரி கொண்டு வரும் மலர்களுக்குடையே வைத்து யாருக்கும் தெரியாமல் எனக்குக் கிடைக்கும் படிச்செய்தீர்களே. நான்தான் பூக்காரியிடமிருந்து தினமும் பூக் கூடையை வாங்கி அரச குமாரிக்கு மலர் மாலை கட்டித் தருகிறேன் என்பதை எப்படியோ கண்டுபிடித்து விட்டீர்களே. ஆமாம்! கடிதத்தின் ஆரம்பத்தில் என் அன்பே கங்கா என்று ஏன் எழுதவில்லை? யாருக்கு எழுதினது என்பது பிறருக்குத் தெரியக் கூடாதுஎன எண்ணி அப்படி மொட்டையாக விட்டு விட்டீர்களா? உண்மையிலேயே நீங்கள் புத்திசாலிதான். இது தப்பித்தவறி வேறு யார் கையிலாவது கிடைத்திருந்தால் என்ன பயங்கர விளைவு ஏற்பட்டிருக்கும்? இதுவே அரச குமாரியின் கையில் கிடைத்திருந்தால் விபரீதமே விளைந்திருக்கும். அவள் இந்தக் கடிதத்தைத் தன் தந்தையிடம் காட்டியிருந்தால் உங்கள் தலையே போயிருக்கும். நல்ல வேளை! தப்பித்தீர்கள்'' என்றாள்.

கங்கா கூறியதைக் கேட்ட கிரிதரன் தன் மனச்சுமையே இறங்கிவிட்டது போல் உணர்ந்தான். அவன் தன் மனதில் ''ஆமாம். கங்கா சொன்னது போல் இந்தக் கடிதம் மட்டும் அரச குமாரியிடம் கிடைத்திருந்தால் என் தலையே போயிருக்கும். நல்ல வேளை. கடித ஆரம்பத்தில் இன்னாருக்கு என நான் எழுதாததும் எவ்வளவு நல்லதாகப் போயிற்று. கங்காவும் அது தனக்குத்தான் எழுதப்பட்டது என்று எண்ணிக் கொண்டிருக்கிறாள். அப்படியே இருக்கட்டும். நான் அரசகுமாரியை மணக்க விரும்பியது முடவன் கொம்புத் தேனுக்கு ஆசைப் பட்டது போலத்தான். நான் கங்காவை மணந்து கொண்டு சுகமாக வாழ்கிறேன்'' என் எண்ணிக் கொண்டான்.

கிரிதரனை கங்காவுக்கு விரைவிலேயே திருமணம் அவனது மாமா செய்து வைத்தான்.



# பொன்மயமான பொழுதுகள்-12





1.... பூமத்திய ரேகையருகே பெங்க்வின் பறவைகள் உலகிலேயே இத்தீவுகளின் கூட்டமுள்ள உஷ்ணம் பகுதியில் வாழும் ஆமைகள், இகுனாபல்லிகள் ஆகியவற்றோடு சேர்ந்து இருந்து பெங்க்வின் பறவைகளும் வாழ்கின்றன.

## உலகில் இவற்றை நாம் எங்கு காண முடியும்?

**2... மிகச் சிறிய நாடு?**

இது அரை சதுரக் கிலோ மீட்டர் பரப்பளவு கொண்டது. மக்கட் தொகை ஆயிரம். இச் சிறு நாடு 1929லிருந்து தனிக் கொடி கொண்டு தன் தபால் தலைகளை வெளியிடுவதோடு தனக்கென தேசிய கீதமும் கொண்டது.



**3... உயரத்திலுள்ள ஏரி?**

கடல் மட்டத்திற்கு மேல் 3811 மீட்டர் உயரத்திலுள்ள டிடிகாகா ஏரியின் நீளம் 190 கி.மீ. ஆழம் 27மீ. இதன் பரப்பளவு 9065 சதுர கி.மீ.



**4... மிக அகலமான நீண்ட பாலம்?**

இதனை அப்பகுதிவாழ் மக்கள் 'ஓல்ட் கோட் ஹாங்கர்' எனக் கூறுகிறார்கள். இதன் மீது போக்குவரத்து 1932ல் தொடங்கியது. 48.8 மீட்டர் அகலமுள்ள இப்பாலத்தின் மீது 8 வரிசைகளில் வாகனங்கள் செல்கின்றன.





**5... எலிகளை மதிக்கும் ஆலயம்?**

சலவைக் கல்லால் கட்டப்பட்ட கார்னி மாதாவின் இந்த ஆலயத்தில் எலிகளை பக்தியுடன் மதித்து அவற்றிற்கு உணவு அளிக்கிறார்கள். காணிக்கையும் செலுத்துகிறார்கள்.

## படப் புதிர்

டேனியல் டீ! போ எழுதிய 'ராபின்சன் க்ரூஸோ' விலிருந்து இப் பகுதி கொடுக்கப்பட்டுள்ளது. இதில் டீ போ ஒரு சிறு தவறைச் செய்துள்ளார். அது என்ன என்று கண்டு சொல்வீர்களா?



''மத்தியான்னம் சற்று நேரத்தைக் கழித்து விட்டு கடல் முற்றிலும் அமைதியாக இருப்பதைக் கண்டேன். வெப்பம் அதிகமாக இருந்ததால் என் ஆடைகளை அவிழ்த்து வைத்து விட்டு நீரில் இறங்கினேன். வெகு நேரத்திற்குப் பின் நான் கப்பலை நோக்கித் திரும்பிச் சென்றேன். ஆனால் கப்பலில் எப்படி ஏறுவது எனத் தெரியாமல் திகைத்தேன். கடைசியில் கப்பலிலிருந்து தொங்கிய ஒரு கயிறு இருப்பதைக் கண்டேன் அதன் உதவியால் கப்பலின் முன் பாகத்திற்கு ஏறிச் சென்றேன். கப்பலில் உணவுப் பொருள்கள் கடல் நீரில் நனையாமல் மொரமொரப்பாய் சாப்பிட ஏற்றதாக இருந்தன. நான் அறைக்குள்சென்று பிஸ்கட்களை எடுத்து என் சட்டைப் பைகளில் நிரப்பிக் கொண்டு வந்து நிம்மதியாக தின்றேன்''

### செய்து பாருங்கள்

# கூண்டில் பறவையை அடைத்து விடுங்கள்

''அட்டையில் 4க்கு 4 செமீ சதுர அட்டையைக் கத்தரியுங்கள்.

அட்டையில் நீள இருபக்கங்களின் நூல்களை மோதிர முடி போடுங்கள்.

அட்டையின் ஒரு பக்கத்தில் பறவையின் படத்தையும் மறுபக்கம் ஒரு கூண்டின் படத்தையும் வரையுங்கள்.

அட்டையின் நூல்களை இழுத்துப் பிடித் துக் கொண்டு வேகமாக சுற்றுங்கள். அப்படிச் சுற்றும் போது அதைப் பார்த்தால் கூண்டில் பறவை அடைபட்டிருப்பது போலத் தெரியும்.





# வேடிக்கை வினாக்கள்

1. குதிரைக்கு ஆறு கால்கள் எப்போது ஆகும்?
2. சுண்டெலியும் யானையும் ஒரே எடை உள்ளவனவாக எப்போது ஆகும்?



3. 9+9+9+1+1ஐச் சேர்த்துக் கூட்டினால் எப்போது 20 கிடைக்கும்?
4. நான் என் நண்பனின் வீட்டிற்குச் சென்றேன் அங்கிருந்து கிளம்பும் போது நண்பனின் தம்பி வந்து "குறுக்கு வழியே போகாதீர்கள் அங்கு ஒரு பாம்பு படுத்துக்கிடக்கிறது. அது விஷப் பாம்பு எனத் தெரிகிறது" என்றான். "நீ அதைக் கடந்து எப்படி வந்தாய்?" என்று நான் கேட்டேன். அவனும் "அது நான் வரும் போது கண்ணை மூடிக் கொண்டு தூங்கிக் கொண்டிருந்தது. இப்போது அது கண் விழித்திருக்கும்" என்றான்.

   அவன் வேடிக்கையாக அப்படிக் கூறு கிறான் எனத் தெரிந்து நான் குறுக்கு வழியே போய் என் வீட்டை அடைந் தேன். நான் நினைத்தபடி பாம்பு வழியில் இருக்கவில்லை. நண்பனின் தம்பி பொய் சொன்னானென நான் எப்படி அறிந்து கொண்டேன்?



5. யானைக்கு எப்போது எட்டு கால்கள் இருக்கும்?
6. இரண்டு கைகளிலிருந்தும் என்றுமே முகம் கழுவிக் கொள்ளாதது எது?



7. கழுத்து இருந்தும் விழுங்காமல் இருப்பது எது?
8. போரில் ஒரு கையை இழந்த போர் வீரன் நெப்போலியன் போனாபர்ட்டை காணச் சென்றான். அவனைக் கண்டு நெப்போ லியன் அவனது வீரத்தைப் பாராட்டி ஒரு பதக்கம் அளித்து "இது இழந்த உன் கைக்காக" என்றான். அப்போது போர் வீரன் "என் இரண்டாவது கையையும் இழந்திருந்தால் என்ன பரிசு அளித்திருப் பீர்கள்?" எனக் கேட்டான்.

   நெப்போலியனும் "உன்னை ஒரு உயர்



அதிகாரியாக ஆக்கி இருப்பேன்" என்றான். உடனே அந்த வீரன் கத்தியை உருவித் தனது மற்ற கையை வெட்டி கொண்டுவிட்டான். இது உண்மையில் நடந்தது என நிகைக்கிறீர்களா? இல்லை என்றால் அதற்கான காரணத்தைக் கூறுங்கள்.

# பனிமனிதனின் படம் வரையுங்கள்

*3 என்ற எண்ணைச் சில கோடுகள் கொண்டு பனி மனிதனாக மாற்றிவிடலாம்*



*8 என்ற எண்ணை சில கோடுகள் கொண்டு ஒரு பூச்சியாக ஆக்கிவிடலாம்*



## பொன்மயமான பொழுதுகள் 11ன் விடைகள்

### உலகில் எங்கு?

1. இந்தோனேசியாவில் மத்திய ஜாவா.
2. அமெரிக்காவின் கலி∴போர்னியாவிலுள்ள வெள்ளை மலைகள்.
3. லண்டனின் தேம்ஸ் நதிக்கரையில்.
4. இத்தாலியின் வெனிஸ் நகரில்.

### படப்புதிர்

கொலம்பஸின் கப்பலில் நட்சத்திரங்களும் கோடுகளுமுள்ள அமெரிக்கக் கொடி இருக்கிறது!

### படக் கேள்விகள்

1. 35 முக்கோணங்கள்

2. 

3. அவை யாவற்றிலிருந்தும்.

### மூளைக்கு வேலை

1. காற்றில்லாத டயர் டிக்கில் உள்ளது.
2. கயறின் இரண்டாவது முனை கட்டப்பட்டிருக்கவில்லை.
3. விண்ட் ஷீல்ட் வைப்பர்கள் செய்யும் ஈரக்கோடுகள் ஒரு காரில் மட்டும் தென்பட்டன.
4. அவனுக்குப் பார்வை இல்லாது போனாலும் ஊமை அல்லவே. ரம்பம் வேண்டுமென்று கேட்டான்.




துர்வாசருக்கும் அவரது ஆயிரம் சீடர்களுக்கும் எப்படி உண வளிப்பது எனத் திகைத்து துரௌபதி கிருஷ்ணரை நினைத்தாள். காட்டி லிருந்த அவள் முன் கிருஷ்ணரும் வந்து நின்றார். அவள் அவரை வணங்கி ''ஆற்றில் குளித்து விட்டு துர்வாசர்தம்சீடர்களோடுசற்று நேரத் தில் இங்கு வந்து விடுவாரே. அவர் களுக்கு உணவு எப்படி அளிப்பேன்? அட்சய பாத்திரத்தைக் கூட அலம்பி வைத்து விட்டேன்'' என்று கவலை யுடன் கூறினாள்.

கிருஷ்ணரும் ''சரி. எனக்கு இப் போது ஒரே பசி. அந்த அட்சய பாத்தி ரத்தைக் கொண்டு வா. அதிலிருந்து எனக்கு எதாவது கிடைக்கிறதா என்று பார்க்கிறேன்'' என்றார். துரௌபதி யும் ''கொண்டு வருகிறேன். அது ஒரு நாளைக்கு ஒரு தடவைக்கு மேல் உணவை அளிக்காதே. இன்று எல் லோரும் சாப்பிட்ட பின் நானும் சாப் பிட்டுவிட்டு அதை அலம்பியும் வைத்து விட்டேன். அதில் ஒன்றுமே இருக்காது. நீங்களே பார்க்கப் போகி றீர்கள்'' என்று கூறி அட்சய பாத்திரத் தைக் கொண்டு வந்து அவரிடம் கொடுத்தாள்.

கிருஷ்ணரும் அதை வாங்கிப் பார்த்து விட்டு சிரித்தவாறே ''ஒன்று மில்லை என்றாயே இதோ ஒரு பருக்கை சாதம் இருக்கிறதே. இது போதும் என் பசியைச் தீர்க்க'' என்று கூறி அந்தச் சாதப் பருக்கையை எடுத் துத் தன் வாயில் போட்டுக் கொண்டு மென்றார். பிறகு அவர் பீமனை அழைத்து ''பீமா! நீ போய் துர்வாசரை யும் அவரது சீடர்களையும் இங்கே சாப்பிடுவதற்கு அழைத்து வா'' என்று கூறி அவனை அனுப்பினார்.

ஆற்றில் குளித்துக் கொண்டிருந்த துர்வாசருக்கும் அவரது சீடர்களுக்கும் திடீரென வயிறு உப்பியது. வயிறு முட்டச் சாப்பிட்டு விட்டது போன்ற

—சைந்தவனின் தோல்வி—



உணர்ச்சி ஏற்பட்டது. எல்லோரும் பலமாக ஏப்பம் விட்டார்கள். அவர்கள் துர்வாசரிடம் ''குருவே! நாம் போய் தருமர் தயாரித்து வைத்திருக்கும் உணவை உண்ண முடியாது. பாவம்! அவர்களை உணவு தயாரித்து வைக்கச் சொன்னது வீணே!'' என்றார்கள்.

துர்வாசரும் ''ஆம். தருமருக்கு துரோகம் செய்து விட்டோம். அவர் சாமான்னியமானவரல்ல. அவர் கோபம் கொண்டு நம்மைப் பார்த்தாலே நாமெல்லாம் எரிந்து சாம்பலாகி விடுவோம். ஒருமுறை அம்பரிஷ மன்னனிடம் அகப்பட்டுக் கொண்டு நான் பட்டபாடு இன்னமும் என் நினைவில் உள்ளது. மறுபடியும் அம்மாதிரி நடக்கக் கூடாது. எனவே நாம் எல்லோரும் இங்கிருந்து ஓடிப் போய் விடுவோம்'' என்றார். மறு நிமிடமே துர்வாசர் உட்பட எல்லோரும் அங்கிருந்து வேகமாக ஓடிப் போய் விட்டார்கள்.

துர்வாசர் அம்பரிஷ மன்னனிடம் சிக்கித் தவித்த கதை இதுதான். அம்பரிஷன் ஏகாதசி விரதமிருந்து விட்டு துவாதசி பாரணைக்காக பிராம்மணர்களோடு சாப்பிட உட்காரப் போகையில் துர்வாசர் அங்கு வந்தார். அம்பரிஷன் அவரையும் சாப்பிட உட்காருமாறு அழைத்தான். துர்வாசர் குளித்து விட்டு வருவதாகச் சொல்லிப் போனவர் வெகு நேரமாகியும் திரும்பி வரவில்லை. குறித்த நேரம் கடந்து விட்டால் துவாதசி பாரணையின் பலன் இராது என்பதால் விருந்தாளி இல்லாமல் சாப்பிடுவது சரியல்ல என்று எண்ணி தண்ணீரை அம்பரிஷன் குடித்தான். துர்வாசர் நேரம் கழித்து வந்து அம்பரிஷன் ஜலபானம் செய்ததற்காக கோபம் கொண்டு மகா கிருத்தியையைச் சிருஷ்டித்து அம்பரிஷன் மீது ஏவினார். அப்போது விஷ்ணுவின் சக்கரம் வந்து கிருத்தியையைக் கொன்று அதனை ஏவிய துர்வாசரைத் துரத்தியது. துர்வாசர் பயந்து பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோரிடமும் போய்த் தன்னைக் காப்பாற்றும்படிக் கெஞ்சினார். அவர்களோ தங்களால் எதுவும் செய்ய முடியாது என்றும் அம்பரிஷனிடமே போகும் படிக்கூறினார்கள். அவரும் அம்பரிஷனிடம் போய் அவனது கால்களில் விழுந்து தன் உயிரை காப்பாற்றிக் கொண்டார்.

பீமன் ஆற்றங்கரைக்கு வந்து பார்த்த போது துர்வாசரோ அவரது

சீடர்களோ இருக்கவில்லை. அவர்கள் ஓடிப் போனதை அங்குள்ள பிராம் மணர்கள் பீமனிடம் தெரிவிக்கவே பீமனும் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்து அச்செய்தியைக் கூற, கிருஷ்ண ரும் ''இனி துர்வாசரும் அவரது சீடர் களும் வர மாட்டார்கள். ஏனெனில் அவர்களது வயிறு அவர்கள் குளித்துக் கொண்டிருக்கும்போதே நிறைந்து விட்டது. எப்படி என்றால் நான் அட்சய பாத்திரத்தில் ஒட்டிக் கொண் டிருந்த ஒரு பருக்கையை எடுத்து என் பசியைத் தீர்த்துக் கொண்டேன். அதனால் உலகில் எல்லோர் பசியும் போய்விட்டது.'' என நடந்ததை அவர் களுக்குக் கூறி அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு சென்றார். கிருஷ் ணரின் உதவியால் துரியோதனின் சதி தகர்ந்தது.

கொஞ்ச காலமானது. ஒருநாள் பாண்டவர்கள் வேட்டைக்குப் போகு முன் துரௌபதியை திருணபிந்து என்ற முனிவரின் ஆசிரமத்தில் விட்டு அவளுக்குத் துணையாக தௌம்யரை யும் இருக்கச் சொல்லி விட்டுச் சென்ற னர். அதே நாளன்று சைந்தவன் சால்வ மன்னனின் புதல்வியை மணக்க அவ் வழியாகச் சென்று கொண்டிருந்தான். அவன் துரௌபதி தனியாக அந்த ஆசிரமத்தில் இருப்பதைக் கண்டு அவளை அடைய எண்ணி அங்கே சென்றான்.

அவன் அவளிடம் ''நீயும் உன் கண வன்மார்களும் நலமா?'' எனக் கேட் டான். அவளும் அவன் துச்சலையின் கணவன் என்பதற்காக மரியாதை கொடுத்து பதிலளித்தாள். சைந்த வனோ ''நீ காட்டில் இப்படி ஏன் சிர மப்பட வேண்டும்? என்னுடன் இப் போதே வா. தேரில் அமர்த்தி அழைத் துக் கொண்டு போய் விடுகிறேன். உன்னை என் மனைவியாக்கிக் கொள் கிறேன். நீ எல்லா சுகங்களையும் அனு பவித்துக் கொண்டு என் அரண்மனை





யில் இருக்கலாம். நாடும் வீடும் இல்லாத பாண்டவர்கள் உனக்கு என்ன கொடுக்கப் போகிறார்கள்? என் பட்டத்து ராணியாகி எப்படியெல்லாம் இருக்கலாம் தெரியுமா?'' என்றான்.

துரௌபதிக்குக் கடுங்கோபம் வந்து விட்டது. அவனை எப்படிப் பாண்டவர்கள் வரும் வரையில் இருக்கச் செய்ய ''உனக்கு என் கணவன்மார்களைப் பற்றித் தெரியுமே. தேவர்களாலும் கூட அவர்களை எதிர்த்து நிற்க முடியாதே. உன்னை அவர்கள் தாக்கினால் உன்னால் என்ன செய்ய முடியும்? பீமனின் கதைக்கு பதில் சொல்ல முடியுமா? அர்ஜுனனின் அம்புகளைத் தடுத்து நிறுத்த முடியுமா இதையெல்லாம் யோசித்துப் பார்த்தாயா?'' என்று கேட்டாள்.

சைந்தவனோ ''பாஞ்சாலி! பாண்டவர்களைப் பற்றி எனக்குத் தெரியாததையா நீ கூறுகிறாய்? அவர்களது பலம் பற்றிக் கூறி என்னை பயமுறுத்தப் பார்க்கிறாயா? நான் அது கேட்டு பயந்து விட மாட்டேன். உலகில் உயர்ந்த பதினேழு க்ஷத்திரிய வம்சங்களில் எங்களுடையதும் ஒன்று. இவ்வளவு உயரிய குடும்பத்தில் பிறந்த என்னை மணந்து கொண்டு சுகமாக இருக்கலாம். வீண் பேச்சு பேசிக் கொண்டிராமல் இப்போதே என்னுடன் வந்துவிடு. பாண்டவர்களுக்கு பயந்து உன்னை நான் விட்டு விட்டு போக மாட்டேன்'' எனக் கூறினான்.

அதைக் கேட்டு துரௌபதி எரிந்து விழுந்து ''அடே நீசனே! பாண்டவர்களின் மனைவியான என்னை நீ அடையவே முடியாது. என்னை விட்டு விட்டுப் போக முடியாது என்றா கூறுகிறாய்? அதைப் பார்த்துக் கொண்டு பாண்டவர்கள் பேசாமலா கைகட்டிக் கொண்டு நிற்பார்கள்? நீ என்னை பலவந்தமாகத் தூக்கிச் சென்றால் உன்னைத் துரத்திப் பிடித்து அர்ஜுனன் சாம்பலாக்கி விடுவார். என்னைக் கவர்ந்து செல்ல தேவர்களின் தலைவனான இந்திரனால் கூட முடியாது. உன்னால் அவரை ஒன்றும் செய்ய முடியாது. உன்னை நான் மணப்பதா? பகல் கனவா காண்கிறாய்? இது ஒரு போதும் நடக்காது. என் மனம் பாண்டவர்களைத் தவிர வேறு யாரையும் நினையாது. கற்பு நெறி தவறாத என்னை யாராலும் எதுவும் செய்து விட முடியாது'' என கர்ஜித்தாள்.

சைந்தவன் தன் கூட வந்தவர்களுக்குச் சைகை செய்ய அவர்கள் துரௌ

பதியைப் பிடிக்கப் போனார்கள். துரௌபதி அவர்களிடம் அகப்படா மல் ஓடி தௌம்யர் காதில் விழும் படி பலமாகக் கத்தினாள். அதற்குள் சைந்தவனே துரௌபதியை அலாக் காகத்தூக்கிக்கொண்டு ஓடத்தொடங் கினான். துரௌபதியின் குரலைக் கேட்ட தௌம்யர் சைந்தவன் அவளைத் தூக்கிக் கொண்டு ஓடுவது கண்டு அவனைத் துரத்தலானார். அவ ரும் 'துரௌபதியைக் கவர்ந்து கொண்டு செல்கிறான். தடுத்து நிறுத் துங்கள்'' என்று கத்திக் கொண்டே ஓடினார்.



அப்போது பாண்டவர்கள் வேட்டை ஆடிவிட்டுத் தம் ஆசிரமத் திற்குத் திரும்பி வந்து கொண்டிருந் தார்கள். அங்கு துரௌபதியைக்காண மல் சுற்றிலும் பார்க்கலானார்கள். அப்போது அவர்களது தேரோட்டி தாத்திரேயிகை என்ற பெண் அழுது கொண்டிருப்பதைப் பார்த்து அவள் அழுவதற்கான காரணத்தைக் கேட் டான். அவளும் அத்தேரோட்டியிடம் துரௌபதியை சைந்தவன் வலுக் கட்டாயமாகத் தூக்கிச் சென்றதைக் கூறினாள். அவன் அது நடந்து எவ் வளவு நேரமாயிற்று எனக் கேட்கவே அவளும் சற்று முன்தான் நிகழ்ந்ததா கக் கூறினாள்.

தருமர் தாத்திரேயிகையை வருத் தப்பட வேண்டாமெனக்கூறி விட்டுத் தன் தம்பிகளுடன் சைந்தவன் சென்ற திக்கிலேயே சென்றார். ஐவரும் தம் ரதங்களில் சைந்தவனைத் தேடிக் கொண்டு சென்றனர். சற்று தூரத்தில் தூசியைக் கிளப்பிக் கொண்டு சைந்த வனின் ரதம் செல்வதை அவர்கள்கண் டார்கள். தௌம்யரும் ஓடிக்கொண்டி ருப்பதைக் கண்டு அவரை நிறுத்தி மெதுவாக வரச் சொல்லி விட்டுப் பாண்டவர்கள் வேகமாகச் சென்றார் கள். அவர்கள் சைந்தவனின் படையை பயங்கரமாகத் தாக்கி சிதறி ஓடும் படிச் செய்தார்கள்.

சைந்தவனில் ரதத்தில் துரௌபதி இருப்பதைக் கண்டு அவர்கள் ''நிறுத்து! ரதத்தை நிறுத்து'' எனக் கூறியவாறே அந்த ரதத்தை அணுகி னார்கள். சைந்தவனைச் சுற்றி இருந் தவர்கள் பயந்து ஓடலானார்கள். சைந்தவனும் என்ன செய்வதெனத் தெரியாமல் விழிக்கலானான்.

அப்போது துரௌபதி ''என்னை மீட்கப் பாண்டவர்கள் வந்து விட்டார் கள். உனக்கும் முடிவு காலம் வந்து விட்டது. நீயாக வரவழைத்துக்

கொண்ட ஆபத்து இது. இதிலிருந்து நீ தப்ப முடியாது'' என்றாள்.

பாண்டவர்களின் தாக்குதலால் தன்சேனை சிதறி ஓடி விட்டதையும் தன் பக்கம் நின்றவர்களும் பயந்து ஓடியதையும் கண்டு சைந்தவன் திகைத்தான். பீமன் அவனைத் தாக்க வரவே இனிதான் பிழைக்கப் போவதில்லை என அவன் எண்ணினான். அப்போது அவனைப் பாதுகாக்க கோடகாம்யன் என்பவன் பீமனை எதிர்க்கலானான். அப்போது ஓடிப் போன சைந்தவனின் நண்பர்களும் திரும்ப வந்து பீமனைத் தாக்கினார்கள். பீமன் அவர்களைத் தாக்கி விரட்டலானான்.

அப்போது அர்ஜுனன் சைந்தவனைப் பிடிக்க முயல அவனை எதிர்க்கப் பலர் வந்தனர். அவர்களை எல்லாம் அர்ஜுனன் தன் அம்புகளால் அடித்து வீழ்த்தினான். மற்ற பாண்டவர்களும் தம்மை எதிர்த்தவர்களை எல்லாம் அடித்து வீழ்த்திக் கொண்டார்கள்.

சைந்தவன் தன் நண்பர்களில் பலரை இழந்தான். கோடகாம்யன் கூடக்களத்தில் நிற்க முடியாமல் ஓடிப் போனான். இதையெல்லாம் கண்ட சைந்தவன் துரௌபதியை ரதத்திலேயே விட்டு விட்டு ஓட முயன்றான். பீமன் தருமரிடம் ''நீங்கள் துரௌபதியை அழைத்துக் கொண்டு ஆசிரமத்திற்குச் செல்லுங்கள். நானும் அர்ஜுனனும் போய் சைந்தவனைக் கட்டி இழுத்து வருகிறோம்'' என்றான்.

தருமரும் ''பீமா! சைந்தவனைக் கொன்று விடாதே. அவன் நம் தங்கை துச்சலையின் கணவன். அவளும் காந்தாரியும் துயரப்படும் படிச் செய்து விடாதே'' என்று எச்சரித்து அனுப்பினார். தருமர் துரௌபதியுடன் ஆசிரமத்திற்குத் திரும்பிச் சென்றார்.

பீமனும் அர்ஜுனனும் ஓடிக் கொண்டிருந்த சைந்தவனைப் பிடித்து விட்டார்கள். அவனுக்கு ஐங்குடுமி வைத்து கரும் புள்ளி செம் புள்ளி குத்தி அவர்கள் தம் ஆசிரமத்திற்கு இழுத்து வந்தார்கள். அவர்கள் அவனை தருமரின் முன் நிறுத்தவே அவரும் ''நீ செய்த இழி செயலால் உன் நிலை எப்படி ஆகிவிட்டது என்று பார்த்தாயா? இனியும் இப்படிச் செய்யாதே'' என்று கூறி அவனை மன்னித்து விடுதலை செய்தார். சைந்தவனும் தலை குனிந்து கொண்டே சென்றான்.



# அம்புலிமாமா செய்திகள்

## காளை ஆண்டு!



சீனர்கள் தம் புராணங்களில் குறிப்பிடப்பட்ட மிருகங்களின் பெயர்களை ஆண்டுகளுக்கு வைத்துள்ளனர்கள். ஒவ்வொரு ஆண்டிற்கும் ஒரு மிருகத்தின் பெயரை வைப்பது என்பது முடியாது என்பதால் பனிரெண்டு ஆண்டுகளுக்குப் பனிரெண்டு பெயர்களை வைத்து பனிரெண்டு ஆண்டுகள் முடிந்ததும் அதே பெயர்களையே அடுத்து வரும் பனிரெண்டு ஆண்டுகளுக்கும் வைத்து வருகிறார்கள். இதன்படி பிப்ரவரி 8ந்தேதி ஆரம்பமான இந்த ஆண்டு 'காளை ஆண்டு' என வழங்கப்பட்டு வருகிறது. புத்தாண்டில் வாழ்த்துக்கள் விருந்துகள், புத்தாடைகள் அணிதல் போன்றவை வழக்கம் போல் நடந்தன. அடுத்த ஜூலையில் ஹாங்காங் பிரிட்டனிடமிருந்து சீனாவுக்குக் கிடைக்கப் போவதால் அங்கும் புத்தாண்டு நாளில் கேளிக்கைகள் நடைபெற்றன. ஊர்வலங்கள் நடந்தன. ஒரு ஊர்வலத்தில் மிகப் பெரிய வடிவில் காளை பலூன் எடுத்துச் செல்லப்பட்டது!

## நீளமான சாக்லெட்

ஸ்வீடன் நாட்டு ஹோட்டல் ஒன்று பிப்ரவரி 17ல் 182 மீட்டர் நீளமுள்ள ஒரு சாக்லெட்டைத் தயாரித்தது. இது கின்னஸ் புத்தகத்தில் சாதனையாக இடம் பெறப் போகையில் ஸ்வீட்ஜர்லாண்டில் அதை விட நீளமான சாக்லெட் தயாரித்து விட்டார்கள். இதன் நீளம் 221 மீட்டர். அதாவது 725 அடிகள். அகலம் 3 செ.மீ. வரிசையாகப் போடப்பட்ட மேஜைகள் மீது அதை வைத்தார்கள். கின்னஸ் அதிகாரிகள் வந்து அதைப் பார்த்த பின் அதனைத் துண்டுகளாக்கி 500 சாக்லெட் பிரியர்களுக்குக் கொடுத்தார்கள்!



## வரிக் கழுதைகள்!

வரிப்புலிகள் எனக் கேள்விப்பட்டிருப்பீர்கள். சிங்கமும் புலியும் சேர்ந்த கலப்பினம் வந்தது போல இப்போது வரிக் குதிரையையும் கழுதையையும் கொண்ட கலப்பினம் கொண்டுவர முயற்சிக்கப்படுகிறது. லண்டனின் வியோமினிஸ்டர் ஜூவில் இரு வரிக் கழுதைகள் பார்வையாளர்களைக் கவர்ந்தன. நாஸி பாலாாட் பழக்கும் இவற்றின் கால்களில் மட்டும் வரிகள் காணப்படுகின்றன.

அம்புலிமாமா
அனுபந்தம்
102



நம் நாட்டுக்
கண்கவர் காட்சிகள்

# ராக் கார்டன்ஸ்

லண்டனின் 'க்யூ கார்டன்ஸ்' அபூர்வச் செடிகளுக்குப் பெயர் பெற்றது. மான் ஹாட்டனிலுள்ள நியூயார்க்கின் சென்ட்ரல் பார்க் 740 ஏக்கர் பரப்பில் பூந்தோட்டங் களையும் நீர் நிலைகளையும் கொண்டு உலகின் மிகப்பெரிய பூங்கா என்று பெயர் பெற்றுள்ளது. ஆனால் நம் நாட்டில் சண்டிகடில் உள்ள பூங்கா இவற்றி லிருந்து முற்றிலும் மாறுபட்டது. இது இயற்கை அளித்த பாறை உருவங்களையும், எதற்கும் உதவாதெனத் தூக்கி எறியப் பட்ட பொருள்களால் உருவாக்கப் பட்ட 20,000 பொம்மைகளையும் கொண்ட அழகான பாறைப் பூங்கா! அழகான பாதைகளையும், வளைவுகளையும், பாலங்களையும் கொண்ட இந்த கார்டன் இங்கு வரும் பார்வையாளர்களுக்கு மட்டற்ற மகிழ்ச்சியை அளிக்கிறது. உடைந்த கண்ணாடித் துண்டுகளைக் கொண்டு உருவாக்கப்பட்ட கரடிகள், குதிரைகள், மயில்கள் எனப் பல உருவங்கள் உள்ளன. நேக் சந்த் என்ற மேதை இந்த ராக் கார்டனை அமைத்துக் கொடுத்தார். அவருக்கு பத்மஸ்ரீ விருதும் குடியரசுத் தலைவரின் கௌரவமும் கிடைத்துள்ளன. தலைநகரில் ஒரு அழகிய பூங்காவை அமைத்துத் தருமாறு அரசாங்கம் 1985ல் அவரை அழைத்தது. நம் நாட்டிலிருந்தும் அயல் நாடுகளிலிருந்தும் வரும் சுற்றுலாப் பயணிகளுக்கும் மற்ற பார்வையாளர்களுக்கும் சண்டிகடின் இந்த ராக் கார்டன்ஸ் கண்களுக்கு அரிய விருந்தாக அமைந்துள்ளது.



நம் நாட்டு முனிவர்கள் :

# சுகதேவர்

வேதங்களை பகுத்து, ஐந்தாவது வேதம் எனப்படும் மகா பாரத்தை இயற்றிய வேத வியாசரின் புதல்வர் தாம் மகா தபஸ்வியான சுக தேவர்.

இவர் சிறிது காலம் தம் தந்தையிடமே கல்வி பயின்று பிறகு தேவ குருவான பிரஸ்பதியிடம் சீடராகச் சேர்ந்தார். தம் படிப்பை முடித்துக் கொண்டு இவர் மீண்டும் வியாசரிடமே வந்தார். அவரிடம் ''என் படிப்பு முடிந்து விட்டது. வேதங்களையும் அவற்றின் பல பகுதிகளையும் கற்றேன். எப்போதும் தியானத்திலும் மூழ்கி எல்லாவற்றையும் முற்றிலும் துறந்து ஐம்புலன்களையும் அடக்கிக் கொண்டு காலம் கழித்து வருகிறேன். ஆனாலும் எனக்கு மனநிறைவு ஏற்பட வில்லையே'' என்று கூறினார்.

வியாசரும் ''நீ விவாகம் செய்து கொண்டு கிரகஸ்தாசிரமத்தை மேற் கொள்'' என்றார் சுகதேவரோ ''எல்லோரையும் போல மணந்து கொண்டு குழந்தைகளைப் பெற்று சம்சார பந்தத்தில் சிக்கி முடிவில் இறக்க நான் சற்றும் விரும்பவில்லை'' என்றார். வியாசரும் ''மகனே! நீ போய் மிதிலாபுரி மன்னர் ஜனகரைப் பார்த்துவிட்டு வா'' என்று யோசனை கூறினார்.

சுகதேவரும் தம் தந்தை கூறியபடி ஜனக மாமன்னரைக் காணச் சென்றார். போகும்போது தாம் சுக போகத்தில் மூழ்கி ஆடம்பரமாக உள்ள ஒரு மன்னரைத்தான் காணப் போவதாக எண்ணிக் கொண்ட படியே அவர் நடந்து சென்றார். ஆனால் அவர் ஜனகரைக் கண்டு அவரோடு பேசி அங்குள்ள நிலையை நேரில் கண்ட பின் ஜனகர் ஒரு சாதாரண மன்னரல்ல என்றும் மன்னராக இருந்து ஆட்சி புரிந்து வந்த தோடு ரிஷி முனிவர் போல தாமரை இலை மீதுள்ள தண்ணீர்ச் சொட்டு போல இருந்து வரும் கர்மயோகி எனத் தெரிந்து கொண் டார்.

அவர் ஜனகரின் வாழ்க்கையைப் போலத் தானும் வாழவேண்டும் என்ற குறிக்கோளுடன் தம் தந்தையிடமே வந்து சேர்ந்தார்.



# உங்களுக்கு தெரியுமா?

## சுல்தான் மீன்

நல்ல தண்ணீரில் மடுக்களில் இந்த சுல்தான் மீன்கள் பிறந்து அங்கேயே இரண்டு ஆண்டுகள் வாழ்கின்றன. அதன் பின் வெள்ளம் வரும் போது அதனுடன் சேர்ந்து கடலுக்குப் போய்ச் சேர்கின்றன. அங்கு சில ஆண்டுகள் இருந்து விட்டுப் பிறகு தம் இனவிருத்திக்காக மீண்டும் அவை தாம் பிறந்த இடங்களுக்கே போய் முட்டையிட்டு குஞ்சு பொறிக்கின்றன.



# வானவில்



## அழகான பறவைகளின் மையம்

சிங்கப்பூரிலுள்ள 'ஜுராங்க் பர்ட் பார்க்' கில் சுமார் 6,000 வகைப் பறவைகள் உள்ளன. எண்பது லட்சம் சிங்கப்பூர் டாலர்கள் செல வில் இதை அமைத்திருக்கிறார்கள். இங்கு ஐந்து ஜாதி 160 பெங்க்வின்களும் 6000 ஜாதி களைச் சேர்ந்த 8000 பறவைகளும் உள்ளன. இந்தப் பறவைகளுக்காக சில நீர் நிலைகளும், பச்சைப் புல்வெளிகளும் இங்கு அமைக்கப் பட்டு உள்ளன. பல அழகிய மரங்கள் வளர்க் கப்பட்டும் வருகின்றன. புறாக்கள், ஹார்ன் பில்ஸ், பெலிகன் ஆகிய பறவைகளையும் வைத்து 'ஆல் ஸ்டார் பர்ட் ஷோ' வாக விளங்கு வதுதான் ஜுராங்க் பார்க்கின் சிறப்பாகும்.



# ஆசையால் நாசமே!

குப்பண்ணனுக்கு இரண்டு ஏக்கர் நஞ்சை நிலம் இருந்தது. அதிலிருந்து அவனது குடும்பத்தை காப்பாற்றும் அளவிற்கு வருமானமும் கிடைத்து வந்தது. ஆனால் அவன் அதனால் திருப்தி அடையவில்லை. ஊரிலுள்ள சில பணக்காரர்களைப் போலத் தானும் பெரும் பணக்காரனாகிவிட வேண்டுமென்று எண்ணி வந்தான்.

ஒரு முறை அவனது ஊருக்கு பரமானந்தர் என்ற யோகி வந்தார். குப்பண்ணன் அவரைக் கண்டு ''சுவாமி! மனிதர்களிடையே ஏழை பணக்காரன் என்ற பாகுபாடு ஏன் உள்ளது?'' என்று கேட்டான். அவரும் ''அதெல்லாம் அவரவர் கர்ம வினைப் பயன். சிலருக்கு சாமர்த்தியமும் சூழ்நிலையும் உதவிட அவர்கள் பணக்காரர்களாகி விடுகிறார்கள்'' என்றார்.

குப்பண்ணனும் ''சுவாமி! நான் பணக்காரனாக விரும்புகிறேன் அதற்கு என்ன வழி?'' என்று கேட்டான். யோகியும் ''நீ வியாபாரம் செய்யலாம். ஏதாவது ஒரு கலைத் துறையைத் தேர்ந்தெடுத்து அதில் சிறந்து விளங்கலாம். பணக்காரர்களிடம் பணிபுரிந்து விஷயங்களை கற்றுக் கொண்டு ஏதாவது ஒரு தொழில் செய்து முன்னேறலாம்'' என்றார்

''அதெல்லாம் என்னால் முடியாது. வியாபாரம் செய்ய எனக்குத் திறமை இல்லை, அனுபவம் இல்லை. பணமும் இல்லை. எந்தக் கலையிலும் என் மனம் நாட்டம் கொள்ளவில்லை. யாரிடமும் தொழில் கற்கவும் எனக்கு மனமில்லை'' என்று குப்பண்ணன் கூறினான்.

அப்போது யோகி ''உனக்கோ உணவிற்கு குறைவில்லை. போதிய வருமானம் வருகிறது. இதற்கும் மேலாக ஏன் ஆசைப்படுகிறாய்? ஆசையால் நாசமே விளையும்'' என்றார். குப்பண்ணனும் ''எல்லோரும்

—சங்கர சுவாமிநாதன்—

பணக்காரனாகவே ஆசைப்படுகிறார்கள். நானும் அப்படித்தான் ஆசைப்படுகிறேன். இது தவறா?'' எனக் கேட்டான்.

யோகியும் ''நேர்மையும் சாமர்த்தியமும் உழைப்பும் கொண்டு சம்பாதிக்கும் பணமே நிலைக்கும். அதிர்ஷ்டத்தால் பணம் கிடைக்க வேண்டுமென எண்ணுவது பேராசையே. உனக்கு இதில் நம்பிக்கை ஏற்படவில்லை என்றால் ஒரு மந்திரம் உபதேசிக்கிறேன். அதை ஜெபித்தால் திருட்டுக்கலையின் அதிபனான சோர தேவன் உன் முன் தோன்றி ஒரு தடவையில் நீ கேட்கும் பணத்தைக் கொடுப்பான். அவன் நிறையப் பணம் வைத்திருப்பவர்களிடமிருந்து பணம் எடுத்து வந்து பணம் இல்லாதவருக்குக் கொடுப்பவன். அந்தப் பணம் நேர்மையாகச் சம்பாதிக்காது போனதால் பணத்தைப் பறி கொடுத்தவன் மன்னனிடம் புகார் செய்வதில்லை. இப்படி அவன் கொடுக்கும் பணம் அதனை அடைந்தவனால் மட்டுமே ஒரு மாத காலத்திற்குப் பார்க்க முடியும். வேறு யாராலும் பார்க்க முடியாது. அது மட்டுமல்ல, அந்தப் பணத்தை அடைந்தவன் அந்த ஒரு மாத காலத்திற்குள் அதைச் செலவு செய்யவும் முடியாது. சோர தேவன் எந்த மனி தனுக்கும் ஒருமுறைக்கு மேல் காட்சி அளிக்கவும் மாட்டான். ஒருமுறை தோன்றி அம்மனிதனின் ஒரு விருப்பத்தை மட்டும் நிறைவேற்றி விட்டுப் போய் விடுவான். பேராசை கொண்ட வர்களுக்கு அவனால் எந்த லாபமும் ஏற்படாது'' என்றார்.



குப்பண்ணன் அவர் சொன்னதை முழுவதும் கேட்டுவிட்டுத் தனக்கு அந்த மந்திரத்தை உபதேசிக்கும்படி வேண்டினான். அவரும் அவனுக்கு அந்த மந்திரத்தை உபதேசித்து ''நீ நாளைக் காலையில் குளித்துவிட்டு இந்த மந்திரத்தை ஜெபித்தால் சோர தேவன் உன் முன் தோன்றுவான்'' என்று கூறினார்.

குப்பண்ணன்தன் வீட்டிற்குச்சென்றான். அவன் மனம் ஒரு நிலையில் இல்லை. எப்போது மறுநாள் காலை வரும் என்று காத்திருந்தான். மறு நாள் சூரியோதயமாகு முன் குளித்து விட்டு யோகி உபதேசித்த மந்திரத்தை உச்சரித்தான். மறு விநாடியே அவன் முன் ஒரு கரிய உருவம் தோன்றியது. பயங்கரத் தோற்றம் கொண்ட அந்த உருவம் ''நான் தான் சோரதேவன். உனக்கு



என்ன வேண்டும்?'' என்று கேட்டது. குப்பண்ணன் பயபக்தியுடன் அதை வணங்கி ''ஐயனே! எனக்குக் கோடி வராகன்கள் வேண்டும்'' என்று கேட்டான்.

அதுவும் ''சரி, அந்தப் பணத்தை இங்கேயே கொட்டட்டுமா அல்லது உன் வீட்டில் ஏதாவது பெரிய பெட்டி இருந்தால் அதில் போட்டு நிரப்பட்டுமா?'' எனக் கேட்டது. குப்பண்ணனும் ''என் வீட்டு மூலை அறையில் மிகப் பெரிய பெட்டி இருக்கிறது. அதில் போட்டு விடுங்கள்'' என்றான். அவ்வுருவமும் ''சரி. நீ வீட்டிற்குப் போய்ப் பார். அது நிரம்பி இருக்கும்'' என்று கூறிவிட்டு மறைந்து போயிற்று.

குப்பண்ணன் நேராக மூலை அறைக்குப் போய் பெட்டியைத் திறந்து பார்த்தான் அது நிறையத் தங்கக் காசுகள் இருந்தன. அவ்வளவு பணத்தைப் பார்த்ததும் அவன் தலையே சுழன்றது. அந்தப் பணத்தால் தம் குடும்பத்தவர் ஏழு தலை முறைகளுக்குக் கவலை இல்லாமல் வாழலாம் என்று எண்ணி மகிழ்ந்தான்.

திடீரென குப்பண்ணன் ஏன் அவ்வளவு சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கிறானென அவளது மனைவி மக்களுக்குப் புரியவில்லை. அவனும் தன் பணத்தைப் பற்றித் தன் மனைவியிடமும் மகனிடமும் கூற விரும்பவில்லை. ஏனெனில் அவர்களால் அந்தப் பணத்தை அப்போது பார்க்க முடியாது. ஒரு மாதத்திற்குப் பிறகே பார்க்க முடியும்.

குப்பண்ணன் தினமும் பணப் பெட்டியைத் திறந்து பார்த்து மகிழ்ந்து வந்தான். அதிலிருந்த பணம் சற்றும் குறையாதது கண்டு அவன் மிகவும் திருப்தி அடைந்தான். இரண்டு வாரங்கள் கழிந்தன. ஒருநாள் வழக்கம் போல அவன் பணப் பெட்டியைத் திறந்து பார்த்த போது அதில் ஒரு வராகன்கூட இருக்கவில்லை. அதைக் கண்ட அவன் தன் பணம் பற்றி பரமானந்த யோகி ஒருவரே அறிவாராதலால் அவர் தாம் ஏதோ மந்திரம் போட்டு அவற்றை மறையச் செய்து விட்டார் என எண்ணினான்.

அவன் யோகியைத் தேடிக் கொண்டு வந்தபோது அவர் ஒருவாரத்திற்கு முன்தான் வேறு ஊருக்குச் சென்றது தெரிந்தது. அவர் சென்ற ஊர் எல்லையை அடைந்த போது அவனை சுப்பண்ணன் என்பவன் கண்டு ''அடடேடே! கும்பிடப்போன

தெய்வம் குறுக்கே வந்தது போல நீயே வந்து விட்டாயா? நானே உன்னைப் பார்க்கத்தான் வந்து கொண்டிருக்கிறேன்'' என்றான்.

குப்பண்ணனும் ''அப்படியா? என்ன விஷயம்?'' என்று கேட்கவே சுப்பண்ணனும் ''நீ என் மகளை உன் மகனுக்கு மணம் செய்து வைக்கச் சம்மதித்து ஐம்பதாயிரம் வராகன்களை வரதட்சணையாகக் கேட்டாய். அப்போது தயங்கிய நான் இப்போது உனக்கு லட்சம் வராகன்கூடக் கொடுக்கத் தயாராக இருக்கிறேன். என்ன சொல்கிறாய்?'' என்று கேட்டான்.

குப்பண்ணனும் ''ஓ! உனக்கு அவ்வளவு பணம் எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டான். சுப்பண்ணனும் ''எல்லாம் பரமானந்த யோகியாரின் தயவுதான்'' என்றான் அதைக் கேட்ட குப்பண்ணன் '' பரமானந்த யோகியாரா! அவரைப் பார்க்கத்தான் இப்போது வந்திருக்கிறேன். அவர் எங்கே இருக்கிறார்? அவரை நான் இப்போதே பார்க்க வேண்டுமே'' எனவே சுப்பண்ணன் அவனை அந்த யோகி தங்கி இருந்த இடத்திற்கு அழைத்துச் சென்றான். ஆனால் அப்போது அவர் வேறு ஊருக்குப் போக ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருந்தார். குப்பண்ணன் தன் நிலமையை அவரிடம் கூறவே அவரும் '''நீ பேராசைப் படாதே என்று கூறினேன். நீ என் பேச்சைக் கேட்கவில்லை. அதனால் உனக்கு சோரதேவனால் பிரயோஜனம் இல்லாது போயிற்று'' என்றார்.

குப்பண்ணனும் ''சுவாமி! என்ன தான் நடந்தது என்று சொல்லுங்களேன்'' என்று வேண்டவே அவரும் ''உன்னிடம் வந்து சேர்ந்த பணம் அநியாயமாகச் சம்பாதித்தது. அதனால் உன்னைப் போல வேறு யாரோ ஒருவன் தான் கோடீஸ்வரனாக வேண்டுமென்று சோரதேவனிடம் கேட்டிருப்பான். அந்தத் தேவனுக்கு கோடி



வராகன் பெற்ற உன்னைப் பற்றிய நினைவு வந்திருக்கும். அதனால் உன்னிடமிருந்து பணத்தை எடுத்து அவனுக்குக் கொடுத்திருப்பான். நீ பேராசைப் படாமல் குறைந்த பணம் கேட்டிருந்தால் உன்னைப் பற்றி அவன் நினைத்திருக்க மாட்டான்'' என்றார்.

அப்போது சுப்பண்ணன் ''ஐயோ! நானும் சோரதேவனிடம் கோடி வராகன்கள் கேட்டேன். அவரும் அதைக் கொடுத்தார். இப்போது போல அந்தப் பணம் குப்பண்ணனின் பணத்தைப் போல மாயமாய் மறைந்து விட்டதோ?'' எனக் கூறி அலறி அடித்துக் கொண்டு ஓடினான். யோகியும் ''இப்போது இவனிடமிருக்கும் பணம் போகாவிட்டாலும் இன்னும் ஒரு வாரத்தில் போய்விடும்'' எனக் கூறி விட்டுத் தம் பயணத்தை மேற்கொண்டார்.

குப்பண்ணன் என்ன நடக்கிறது எனக் காண சுப்பண்ணனின் வீட்டிற்குச் சென்றான் அவன் ஒரு பெரிய காலிப் பெட்டியின் முன் கன்னத்தில் கையை வைத்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைக் குப்பண்ணன் கண்டான்.

விஷயத்தைப் புரிந்து கொண்ட அவன் சுப்பண்ணனின் முதுகில் தட்டி ''கவலைப்படாதே, நமக்கு அதிர்ஷ்டம் வந்தது போல வந்து போய் விட்டது. பேராசைப் படாதே என்று யோகி சொன்னதை நான் கேட்கவில்லை. அதன் பலன் தான் இது'' என்றான்.

''நானும் பேராசைப் பட்டேன். என் மகளுக்குக் கல்யாணம் செய்து வைக்க நிறைய வரதட்சணை கொடுக்க ஆசைப்பட்டு மிகப்பெரிய தொகையாக கோடி வராகனைக் கேட்டேன். அந்த பேராசைதான் எனக்கும் ஒன்றுமில்லாமல் செய்து விட்டது'' என்றான் சுப்பண்ணன்.

குப்பண்ணன் சுப்பண்ணின் கையைப் பிடித்து எழுப்பி ''நாம் இருவருமே பேராசைப்பட்டு நஷ்டப் பட்டோம். என் மகனை நீ உன் மாப்பிள்ளையாக்கிக் கொள்வது ஒன்றும் பேராசையல்ல. ஒரு பைசா கூட வரதட்சணை வேண்டாம். உன் மகளை நான் தாராளமாக என் மருமகளாக ஏற்றுக் கொள்கிறேன்'' என்றான்.

அது கேட்டு சுப்பண்ணன் மகிழ்ந்து போனான்!





# மூன்று பலசாலிகள்!

ஒரு காட்டின் எல்லையில் கட்டைய்யன் என்பவன் இருந்தான். அவன் பலசாலி. தினமும் காட்டிலிருந்து விறகு வெட்டி, பெரிய சுமையாகக் கட்டி எடுத்து வந்து தன் வீட்டில் போட்டு விட்டுத் தன் மனைவியிடம் ''பார்த்தாயா? இவ்வளவு பெரிய சுமையை யாராலும் சுமந்து கொண்டு வர முடியாது. நான் பீமனுக்குச் சமம்'' என்று மார் தட்டினான்.

அப்போது அவன் மனைவி காளியம்மாள் ''உலகில் தன்னை மிஞ்சியவர் யாருமே இல்லை என்று ஒருவன் நினைக்கக் கூடாது வல்லவனுக்கும் வல்லவன் இருக்கத்தான் இருப்பான். நீ பலசாலியாக இருக்கலாம். உன்னை விட பலசாலி எங்காவது இருப்பான்'' என்றாள். கட்டைய்யன் கோபத்தோடு ''வெட்டிப் பேச்சு வேண்டாம். என்னை விட பலசாலி இந்த உலகத்தில் எங்குமே இருக்க முடியாது. அப்படி இருந்தால் ஒரே அடியில் அவனை அடித்து வீழ்த்திவிடுவேன். நீ மட்டும் என்னை விட பலசாலியைக் காட்டு. நான் அப்போதுதான் நம்புவேன்'' என்றான்.

ஒரு நாள் காளியம்மாள் குடத்தைத் தலை மீது வைத்துக் கொண்டு சற்று தூரத்திலுள்ள கிணற்றிலிருந்து தண்ணீர் எடுத்து வரப் போனாள். குடத்தைக் கீழே வைத்து விட்டு கயிற்றில் கட்டப்பட்டிருந்த வாளியை கிணற்றில் விட்டாள். வாளி நீரை நிரப்பிக் கொண்டு கிணற்றினுள் தடைப்பட்டு ஓரிடத்தில் நின்று விட்டது. காளியம்மாள் தன் பலமெல்லாம் பயன்படுத்தி இழுத்துப் பார்த்தும் வாளி மேலே வரவே இல்லை. தன் கணவனை அழைத்து வந்து அதை இழுக்கலாம் என எண்ணி அவள் தன் குடத்தை எடுத்து கொண்டு தன் வீட்டிற்குத் திரும்பலானாள்.

அப்பொழுது வேறொருத்தி தன் இடுப்பில் குழந்தையோடும் தலை

— எஸ். சங்கரராம் —

யில் குடத்தோடும் வந்து கொண்டிருந்தாள். காளியம்மாள் காலிக் குடத்தோடு வருவதைப் பார்த்து அவள் ''என்னம்மா! கிணற்றில் தண்ணீர் இல்லையா? காலிக் குடத்தோடு ஏன் போகிறாய்?'' என்று கேட்டாள். காளியம்மாளும் ''தண்ணீர் இல்லாமல் என்ன? கிணற்றுள் வாளி எங்கோ அகப்பட்டுக் கொண்டு வெளியே வரவில்லை. என்ன இழுத்துப் பார்த்தும் என்னால் அதை வெளியே கொண்டு வர முடியவில்லை'' என்றாள்.

அதைக் கேட்ட அந்த பெண் ''பூ! இதுதானா? வா என்னோடு'' என்று கூறிக் காளியம்மாளைக் கிணற்றுக்குக் கூட்டிக் கொண்டு போனாள். அப்போது அவளது இடுப்பிலிருந்த குழந்தை கிணற்றில் தொங்கிக் கொண்டிருந்த கயிறைப் பிடித்து ஒரு இழு இழுத்தது. வாளி கிணற்றிலிருந்து மேலே தண்ணீருடன் வந்தது. அதன் பின் அந்தப் பெண்ணும் காளியம்மாளும் அந்தக் குழந்தை தண்ணீர் இழுத்துக் கொடுக்கக் கொடுக்க தம் குடங்களை நிரப்பி எடுத்துக் கொண்டார்கள்.

காளியம்மாள் ஆச்சரியப்பட்டு ''யாரம்மா நீ! உன் கணவன் யார்? இது உன் குழந்தையா?'' என்று கேட்டாள். அந்தப் பெண்ணும் ''ஆமாம், இது என் குழந்தைதான். என் கணவரின் பெயர் மலையப்பன். அதோ அந்த வழியாகப் போனால் எங்கள் வீடு வந்து விடும்'' என்று கூறிக் குடத்தைத் தலை மீதும், குழந்தையை இடுப்பிலும் வைத்துக்கொண்டு தன் வழியில் சென்றாள். காளியம்மாவும் தன் வீட்டிற்கு வந்து நடந்ததைத் தன் கணவனிடம் கூறி ''பார்த்தாயா? ஒரு சிறு குழந்தையே மிகவும் பலசாலியாக இருந்தால் அதன் தகப்பன் எவ்வளவு பலசாலியாக இருப்பான்? எனவே இப்பகுதியில் உன்னைவிட ஒரு பலசாலி இருக்கிறான்'' என்றாள்.



கட்டைய்யனும் ''இப் பகுதியில் என்னை விட ஒரு பலசாலி இருக்கி றான் என்றா நீ கூறுகிறாய்? சரி நாளையே போய் அவனைப் பார்த்து அடித்து உதைத்துவிட்டு வருகிறேன்'' என்று வீராவேசத்துடன் கூறினான். காளியம்மாளோ ''வேண்டாம் இந்த வீண் வம்பு. அவன் உன்னைக் கொன்று விட்டால் என் கதி என்ன ஆகும்? அவனது குழந்தைக்கே அவ் வளவு பலம் என்றால் அவனுக்கு எவ் வளவு பலம் இருக்கும்? கொஞ்சம் யோசித்துப் பார்'' என்றாள்.

கட்டைய்யனோ ''நாளை நீயும் என்னுடன் வா. அந்த மலையப்பனை ஒரு கை பார்க்கிறேன்'' என்றான். மறு நாள் கத்தி, வில், அம்புகளை எடுத்துக் கொண்டும் காளியம்மாளை அழைத் துக் கொண்டும் அவன் கிளம்பினான். அவர்களிருவரும் குடி நீர்க் கிணறை அடையும்போது மலையப்பனின் மனைவியும் அங்கு வந்தாள். அப் போது கட்டைய்யன் தன் மனைவி யிடம் ''இந்தக் கிணற்றில் தான் வாளி யைப் போட்டா இழுக்க முடிய வில்லை என்றாய்? இப்போது நான் இழுத்துக் காட்டுகிறேன் பார்'' என்று கூறிக் கயற்றில் கட்டி இருந்தவாளி யைப் கிணற்றினுள் விட்டான். வாளி தண்ணீரை நிரப்பிக் கொண்டு உள்ளே அமுங்கி விட்டது.

கட்டைய்யன் தன் பலம் கொண்ட மட்டும் கயிறைப் பிடித்து இழுத்தான். ஆனால் வாளி வெளியே வரவில்லை. அவனும் தட்டு தடுமாறி கிணற்றில் விழ இருந்தான். ஆனால் அந்தப் பெண்ணின் இடுப்பில் இருந்த குழந்தை அவனைப் பிடித்து நிறுத்திக் கிணற்றில் விழுந்து விடாமல் அவனைக் காப்பாற்றியது பிறகு அக் குழந்தை வெகு எளிதாய் கயறைப் பிடித்து இழுத்து வாளியைக் கிணற்றி லிருந்து வெளியே கொண்டு வந்தது.

அப்போது காளியம்மாள் ''பார்த்





கொடுக்க வேண்டும். அவர் வரும் வேளைஇது. எங்காவது இங்கு ஒளிந் திருந்து அவரைப் பார். நீ மட்டும் அவர் கண்ணில் பட்டால் உன்னை ஒடித்து அப்படியே விழுங்கி விடு வார்'' என்றாள். பிறகு அவள் அவனை ஒரு பாதாள அறைக் குழிக்குள் இறக்கி ஒளிந்திருக்கச் செய்தாள்.

மாலையானது. ஒரு சுழல் காற்று வீசியது. மலையப்பன் வந்தான். ''யானையை சமைத்தாயிற்றா?'' என்று உரத்த குரலில் கேட்டான். அக் குரலே கட்டைய்யனை நடு நடுங்க வைத்தது. அப்போது அவன் மனைவி ''ஓ! தயாராக உள்ளது. சாப்பிடலாம்'' என்றாள். அப்போது மலையப்பன் ''எங்கிருந்தோ நர மாமிச வாசனை வருகிறதே. இரு. வீட்டைச் சுற்றிப் பார்க்கிறேன்'' என்று வெளியே போனான்.

அவன் போனதும் அவள் கட்டைய் யனிடம் ''என் கணவன் வந்து சாப் பிட்டு விட்டு நன்கு தூங்கி விடுவான். அப்போது சன்னல் வழியாக நீ தப்பி ஓடி விடு. இனி இந்தப் பக்கமே தலை காட்டாதே'' என்றாள். அவனும் அவள் கூறிய படியே ஓடி விடுவதாகச் சொன்னான்.

மலையப்பன் திரும்பி வந்து ''யாரும் காணோம். நாளை பார்க்கி றேன்'' என்று கூறி யானை மாமிசத் தைச் சாப்பிட்டு விட்டுப் படுத்து நன்கு தூங்கி விட்டான். அதுதான் சரியான சமயமென்று கட்டைய்யன் பாதாள அறைக் குழியிலிருந்து வெளி வந்து சன்னல் வழியாக வெளியே குதித்து ஓடினான்.

அவன் கொஞ்ச தூரம் போனதும்

தாயா? உன்னை விட பலசாலி இருக் கிறானென்று ஒப்புக் கொள்கி றாயா?'' என்று கேட்டாள். அப்போது கட்டைய்யனும் ''நான் இவனது தந் தையைப் பார்த்தேயாக வேண்டும்'' என்றான். காளியம்மாளும் ''சரி, நீ போய் பார். உன் விதியை யாரால் தடுக்க முடியும்?'' என்று கூறி வீட்டிற் குத் திரும்பிப் போய் விட்டாள்.

அந்தப் பெண் கட்டைய்யனிடம் ''நீயும் உன் வீட்டிற்குப் போய் விடு. என் கணவனோடு மோத முயலாதே'' என்றாள். ஆனால் கட்டைய்யனோ அவளது கணவனை சந்திக்கப் போவ தாகக் கூறி அவளது வீட்டிற்கு அவள் பின்னாலேயே சென்றான்.

அவளும் ''என் கணவன் வேட்டை யாடப் போயிருக்கிறார். அவருக்கு தினமும் ஒரு யானையைச் சமைத்து

பெரிய சூறாவளி வீசியது ''நர வாசனை! நரவாசனை!! என்ற குரல் கேட்டது. அது மலையப்பன் குரல் தான் என்று அறிந்து கொண்ட கட்டைய்யன் மேலும் வேகமாக ஓடினான். அப்போது மலையப்பன் அவனைத் துரத்திக் கொண்டே வந்தான். கட்டைய்யன் காட்டின்நடுவே மனித நடமாட்டமே இல்லாத இடத்தில் தான் ஓடிக் கொண்டிருந்தான்.

அப்போது அவன் மிகப் பருமனும் உயரமுமான ஒருவனைக் கண்டு அதிர்ந்து போனான். அவன் காட்டு மிருகங்கள் பலவற்றை மலை போலக் குவித்து அவற்றைக் கடித்துத்தின்று கொண்டிருந்தான். அவன் கட்டைய்யனைப் பார்த்ததும் ''யார் நீ? உன்னை யார் துரத்திக் கொண்டு வருகிறான்?'' என்று கேட்டான். கட்டைய்யனும் ''பீமன் போல ஒருவன்'' என்று தட்டுத் தடுமாறிக் கொண்டே கூறினான்.

உடனே அந்த மனிதன் ''ஓஹோ இந்தக் காட்டில் ராட்சஸனாகிய நான் இருக்க யாரவன் பீமன் போலிருப்பவன்? வரட்டும் பார்க்கிறேன்'' என்று உறுமியவாறே எழுந்து நின்றான். இதே சமயம் மலையப்பன் அங்கு வந்து சேர்ந்தான். அவனோடு வந்த சுழல் காற்று கட்டைய்யனை உயரத் தூக்கி எறிந்தது. அவன் ஒரு மரத்தின் கிளைகளுக்கிடையே சிக்கிக் கொண்டான்.

அங்கிருந்து ராட்சஸனும் மலையப்பனும் பயங்கரமாகச் சண்டை போடுவதை அவன் கண்டான். அவர்கள் அடித்துக் கொண்ட அடி, உதைகளால் சுற்றிலுமுள்ள மலைகள் கூட அதிர்ந்தன. விடியும் வரை அவர்களது சண்டை நடந்தது. வெளிச்சம் வந்ததும் அவர்கள் உயரக் கிளம்பி மேகங்களிடையே மறைந்து போய் சண்டை போட்டனர். இடி இடிப்பது போன்ற சத்தம் மட்டும்தான் அவனுக்குக் கேட்டது. அவர்களில் யார் வென்று வருவாரென்று பார்த்து கொண்டு கட்டைய்யன் கொஞ்ச நேரம் நின்றான். ஆனால் அவர்களில் யாருமே வரவில்லை.

கட்டைய்யன் மெதுவாக மரத்திலிருந்து கீழே இறங்கி தன் வீட்டிற்கு எப்படியோ போய்ச்சேர்ந்தான். அதன் பிறகு அவன் தன் பலத்தைப் பற்றி யாரிடமும் பெருமை அடித்துக் கொள்ளவில்லை.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1997 ஜூலை மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மே 30-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

## மார்ச் மாதப் போட்டி முடிவு

*முதலாவது போட்டோ* : **அன்பு உலகின் காட்சி.**

*இரண்டாவது போட்டோ* : **அறிவியல் உலகின் சாட்சி.**

*பரிசு பெற்றவர்* : **திரு. ஜோ. சேவியர், உளுத்தூர்-608704.**

# அம்புலிமாமா

*இந்தியாவில் ஆண்டு சந்தா ரூ.72.00*

*சந்தா அனுப்ப வேண்டிய முகவரி :*

**டால்டன் ஏஜென்சீஸ், சந்தமாமா பில்டிங்ஸ், வடபழனி, சென்னை-600 026.**

Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras - 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras - 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.

THE MOST ENDEARING GIFT YOU CAN THINK OF
FOR YOUR NEAR AND DEAR WHO IS FAR AWAY

# CHANDAMAMA



**Give him the magazine in the language of his choice—**
Assamese, Bengali, English, Gujarati, Hindi, Kannada,
Malayalam, Marathi, Oriya, Sanskrit, Tamil or Telugu
**—and let him enjoy the warmth of home away from home.**

**Subscription Rates (Yearly)**

**AUSTRALIA, JAPAN, MALAYSIA & SRI LANKA**

By Sea mail Rs **129.00** By Air mail Rs. **276.00**

**FRANCE, SINGAPORE, U.K., U.S.A.,
WEST GERMANY & OTHER COUNTRIES**

By Sea mail Rs. **135.00** By Air mail Rs. **276.00**

**Send your remittance by Demand Draft or Money Order favouring
'*Chandamama Publications*' to:**

CIRCULATION MANAGER **CHANDAMAMA PUBLICATIONS** CHANDAMAMA BUILDINGS
VADAPALANI MADRAS 600 026

